# பெரியமாபுத்து

# பொன்னுருவிமசக்கை

விலைஅணா

B.R.N. & SONS
MADRAS.

ஸ்ரீ ராமஜெயம்

புகழேந்திப் புலவர் இயற்றிய

பெரிய எழுத்து

# பொன்னுருவி மசக்கை



B. இரத்தின நாயகர் ஸன்ஸ்,

திருமகள் விலாச அச்சு நிலையம்,

சென்னை.

இதன் விலை] 1951. [அணா 10.

ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்

S. M. L. Prakaash

# பொன்னுருவி மசக்கை

விநாயகர் தோத்திரம்

காப்பு

சீதரன்மருமகனே செந்தாமரைமுகனே
பாதச்சிலம்பொலிக்க பலமணிகள்தான்கலிக்க
பொன்னுருமாலையனே புகல்கல்விச்சாலையனே
வன்னமருங்கோனே வளர்கொம்பொருங்கோனே
காராணைமாமுகனே கண்ணன்மருமகனே
சீரானகல்வியனே செப்பும்போர்வெல்லியனே
நனிவாழைத்தீங்கனியே நவில்பலாமரங்கனியே
தனிமாலைபூண்மணியே தளசேகர்க்கோரணியே
தேவருக்குந்தேவனே தேசத்தோர்சீவனே
யாவருக்கும்பெரியவனே யமரர்க்குரியவனே
அத்திமுகனாரே அரனார்மகனாரே
சத்திமகிழ்புதல்வா சாற்றும்வானோர்முதல்வா
பொன்னுருவிதன்கதையைப் போற்றிமிகப்படிக்க
வின்னங்கள்வாராமல் விநாயகரேமுன்னிருந்து
மைந்தனிக்கதையை மகிழ்ச்சியாய்யான்பாட
எந்தனுடவினைகள் எல்லாம்பறந்தோட
புவிதனிலிக்கதைகள் பூர்த்தியாய்த்தான்பரவக்
கவிமுன்னேவந்ததுவும் கற்பகப்பிள்ளையாரே
பாட்டினிசைதெரியேன் பாவினங்கள்சொல்லறியேன்
எட்டிலெழுதறியேன் எழுத்தாணிக்கூறறியேன்
உனக்கு அடிமையானேன் உம்பர்பிரானாரே
எனக்குமொருமுகமாய் இலங்கும்பெரியோனே
சொர்க்கம்போவோர்க்குத் துணையாயுதவிசெய்வீர்
வர்க்கம்பலகாரம் வாங்கும்பெரியோனே
அப்பமெழுநூறும் அதிரசங்கள்தொண்ணூறாம்
செப்பரியவெள்ளுருண்டைசேரநூறுயிரமாம்
உடைக்கநல்லதேங்காய்களொன்பதுநூறுயிரமாம்

படைக்க நல்லபச்சரிசி பதினுயிரக்கலமாம்
கூனேடேபாக்கும் குடத்தோடேசக்கரையும்
தேனேடேசெந்தினேமா தேவா அமுதமுடன்
செங்கரும்புரஸ்தாளி சீனிப்பலாப்பழமும்
தங்கும்வாழைக்கனியும் தளர்வில்லாமாங்கனியும்
தேங்காய்கொளுக்கட்டை திரளானபாணக்கமும்
மாங்காய்விளாங்கனியும் மாதுளை நற்கனியும்
ஓங்காரமாகவே ஒளிவானஐங்கரற்கு
தீங்கில்லாச்சாம்பிராணி தூபதீபமுந்தந்தேன்
வந்தருளவேண்டுமையா மாயன்மருமகனே
சிந்தைமகிழ்ந்து சிறியேன்முன் நில்லுமையா

### சுப்பிரமணியர் தோத்திரம்

கந்தாகடம்பா கதிர்வேலாகார்த்திகையின்
மைந்தாயென்முன்னின்று வரமீய்ந்துகாப்பாயே
வள்ளிமணவாளா வந்தெனக்குமுன்னடவாய்
கள்ளமன துருமல் கடையேன்முன் நில்லுமையா
போரூரைசீலா புனிதவடிவேலா
ஆரூரமர்ந்தவனே அடியேனைக்காருமையா
பத்தியுடன்றொழுதேன் பரிந்தெனக்குமுன்னடவாய்
புத்திதனை நீகொடுத்தால் புகழ்ச்சியுடன்யான்படிப்பேன்
எம்பிரான்முன்னடக்க என்கதையும்பின்னடக்க
தம்பிரானுனசிவ சண்முகனேமுன்னடவாய்

### சரஸ்வதி தோத்திரம்

நாவிற்சரஸ்வதியே நான்முகன்றேவியரே
பூவிலமர்ந்தவளே புல்லறிவேன்முன்னடவாய்
கலைமகளேபொன் னுருவி கதைதன்னையான்படிக்க
நிலையுடனெந்தனது நினைவிற்பொருந்துமம்மாள்
தாமரையில்வாழ்பவளே தமியேன்முன் நில்லுமம்மாள்
நாமகளேபூமகளே நாயேன்முன் நில்லுமம்மாள்
சரணமென்றடிபணிந்தேன் தற்காக்கவேண்டுமம்மாள்
தருணமிதுசமயம் தயைபுரியவேண்டுமம்மாள்
கற்றமட்டும்பாடுகிறேன் காரிழையாள்தன்கதையை
குற்றமிருந்தாலுங் கொண்டனைக்கவேண்டுமம்மாள்

கதையின் வரலாறு

பேடைமயில்கண்ணாள் பெருந்திருவாள் நாயகமே
ஏழாம்நிலையும் எழுநிலையின்மேலேறி
மேலாங்கதவை விடுகதவைத்தாள்திறந்து
அரண்மனைசாலகத்தை ஆர்க்கவேதாள்திறந்து
பலகேணிவாசல் திறந்தந்தபைங்கிளியும்
நாலால்கடுந்திரளார் நூற்றொருவர்தான்பிறந்தார்
அவர்—அம்பலங்கடோறும் அடங்கலும்மலடானார்
ஆண்மலடுபெண்மலடு அருகிருந்தார்தான்மலடு
ஆனைமலடு அருஞ்சிங்கந்தான்மலடு
ஒட்டைமலடு ஒதுங்கிருந்தார்தான்மலடு
குதிரைமலடு குடியிருந்தார்தான்மலடு
பசுவுமலடுவாசல் பணிசெய்வார்தான்மலடு
ஆடுமலடு அடங்கலுந்தான்மலடு
தெருவிலிருக்கிற தென்னமரந்தான்மலடு
வாசலிலிருக்கிற வாழைமரந்தான்மலடு
புறக்கடையிலிருக்கிற புன்னைமரந்தான்மலடு
பிச்சைக்குவருகிற பிராமணருந்தான்மலடு
ஆற்றில்கரைத்த புளியானேன்பாவிநான்
அங்காடிக்கிட்ட பதரானேன்பாவிநான்
குன்றின்மேல்பேய்ந்த மழையானேன்பாவிநான்
குடத்திலேவைத்த விளக்கானேன்பாவிஎன்று
வையைநகராளும் மகாராசன்தேவியரும்
மாநகரமாளும் மகராசன்தேவியரும்
தேசத்தையாளுந் துரியோதனன்தேவியரும்
அவளுக்கு-மைந்தருமில்லையென்றுமாதுமனஞ்சலித்து
மாதுமனஞ்சலித்து மண்டபத்திற்பள்ளிகொண்டாள்
வேஷ்டிவிரித்து வெகுநிலத்திற்பள்ளிகொண்டாள்
ஆடைவிரித்து அழுதுமேபள்ளிகொண்டாள்
முந்தாணிதான்விரித்துமுருகுழலாள்பள்ளிகொண்டாள்
மகாமுனியாழ்வாரும் வண்ணக்குழைபிள்ளையாரை
பிராமணராய்வந்து பெருந்திருவாள்கைகொடுத்தாள்
பேடைமயிற்கண்ணாள் பெருந்திருவாள்தான்வாங்கி
மாதுமனமகிழ்ந்து மண்டபத்திற்கண்விழித்து
பொழுதுவிடியட்டும் பொன்னுருவிக்கேகொடுப்போம்
தானுங்கனவுகண்டேன் நற்கன்னிக்கேகொடுப்போம்

இப்படியாக இருக்கின்றவேளையிலே
கங்குல்விடிந்தது கதிரோனும்வந்துதித்தான்
செங்கண்மால்கோவிலுக்குத் திருக்காப்புச்சென்றது

### தாதிகள் சமையல் செய்தது

அங்குமொருதாதி அறிவுடையாள்தானெழுந்து
காஞ்சிநாடாளும் கருணர்வருவாரென்று
ஆக்குமடப்பள்ளியை அலகிட்டுத்தாள்திறந்து
கோலமடப்பள்ளியைக் குச்சிட்டுத்தாள்திறந்து
அடுப்புமெழுகியே அட்சதைக்காப்புமிட்டு
பானைகழுவி பனிநீருலைவார்த்து
வடகடலில்செம்பொனென்ன வாரியனல்மூட்டி
தென்கடலில்முத்தென்னத் திரட்டிஉமியிறைத்து
ஆச்சாவுந்தேக்கும் அகிலும்பிளந்தடுக்கி
மாணிக்கக்கட்டி நெரித்துநெருப்பாக்கி
குழலெடுத்தூதினர் கொம்பனைமார்தாதியரும்
பூமியிலுள்ள புதுக்கறிகளத்தனையும்
காவடியில்கொண்டுவந்து போட்டார்கள்மன்னவர்கள்
அம்மியெடுத்தார் அரிவாள்மணையெடுத்தார்
காய்ந்தமிளகாய் கறிமிளகாய்சீரகமாம்
அரைத்துவழித்தெடுத்தார் அன்பானதளிகைக்கு
சேர்த்துவழித்தெடுத்தார் செம்பொன்தளிகைக்கு
வாழைக்காய்கொய்வார் வழுதலங்காய்காம்பறிவார்
ஈழப்பலாக்காயை இளமுள்ளுபோக்கிடுவார்
சேதிபிறக்க சிறப்பாகச்செய்திடுவார்
அன்பானஅவரைக்காய் ஆய்வார்கள்கொம்பனைமார்
மாதுளங்காய்பூசனிக்காய் வன்மையாய்வருத்திடுவார்
கர்ப்பூரம்போலவே கருணைசிறுகிழங்கு
அற்புதம்போலே புளியிட்டுத்தான்சமைத்து
பொற்பதமதாகப் போதச்சமைத்துவைத்தார்
ஆயிரத்தெட்டு அருங்கறியும்போசனமும்
ஐந்நூற்றியெட்டு பொறிக்கறியும்போசனமும்
தாளிதமும்பச்சடியும் தன்னில்வகைக்கறியும்
அடிசில்சமைத்து அரைநாழிக்குள்ளாக
வெள்ளிக்கிடாரத்தில் வெந்நீருபாரித்தார்
பொன்னுக்கிடாரத்தில் போதநீர்பாரித்தார்

தங்கக்கிடாரத்தில் தாகநீர்பாரித்தார்
சாலோடேபாரித்து வைத்தார்தடங்கண்ணர்
கனகமணிகட்டில்விட்டு கருணரெழுந்திருந்து
ஆடைகளைந்து ஆபரணந்தான்கழற்றி
ஆடையுங்கச்சும் அவிழ்த்தந்தஆணழகன்
ஆபரணப்பெட்டி அப்போதுதான்திறந்து
ஆபரணமெல்லாம் அடங்கலுங்கழற்றிவைத்து
தங்கமிதியடிமேல் ஏறித்தனஞ்செயரும்
முத்துமிதியடியைத் தொட்டுமிகநடந்தார்
முத்தால்கடகத்தை முன்னேக்கிதானடந்தார்
மஞ்சனீர்சாலையிலே மன்னவரும்போய்புகுந்தார்
அங்கேயொருதாதி அறிவுடையாளோடிவந்து
கெண்டியில்தீர்த்தமது கொடுத்தாள்கிளிமொழியாள்
மாலைமுடியானும் மஞ்சள்நீராடினர்
ஈரத்துயில்களைந்து இழைசேர்ந்தபட்டுடுத்தி
நனைந்ததுயில்களைந்து நாகரீகப்பட்டுடுத்தி
சிவசிவாவென்று திருநீற்றுக்காப்பணிந்து
அரகராவென்று அணிந்தாரேவெண்ணீறு
பத்திரஞ்சாத்தி பகவானைப்பூசைசெய்து
தும்பைமலரெடுத்து சூரியரைப்பூசைசெய்து
இந்திரரைநோக்கி இருகையால்தான்றெழுதான்
ஐயனைமெய்யனை ஆயிரங்கண்ணிந்திரனை
பொய்சொல்வார்க்கெல்லாம் புறங்காக்கும்புண்ணியரை
மெய்சொல்வார்க்கெல்லாம்விளக்கொளியாய்நின்றவரை
முப்பத்துமுக்கோடி முனிவரையும்பூசைசெய்து
நாற்பத்தெண்ணுயிரம் ரிஷிகளையுங்கைதொழுது
ஆடையுங்கச்சும் அணிந்தந்தஆணழகன்
சீருலவுங்கச்சும் எடுத்தந்ததேர்வீரன்
முத்துமிதியடியைத் தொட்டுமிகநடந்து
அரண்மனையேழுகட்டும் அந்தப்புறந்தாண்டி [ர்
அமுதுண்ணும்மண்டபத்தே ஆணழகன்வந்திருந்தா

## கருணர் போசனமுண்ணது

அங்குமொருதாதி அறிவுடையாளோடிவந்து
வட்டமணைபோட்டு வாழைக்குருத்துமிட்டாள்
இட்டமணைமேலே எழில்விசையர்வீற்றிருந்தார்

புலிமுகக்கால் நிறுத்தி பொன்னுத்தளிகையிட்டார்
சிங்கமுகக்கால் நிறுத்தி செம்பொன்றளிகையிட்டார்
மற்றுமொருதாதி மாதவளோடிவந்து
தாளிதமும்பச்சடியும் தன்னில்வகையறியும்
பொரித்தபொரிக்கறியும் பொன்போல்சிறுபருப்பும்
கூட்டுக்கறியும் குழம்பில்வகைக்கறியும்
ஆயிரத்தெட்டு அருங்கறியும்போசனமும்
சுற்றிலுங்கறியைவைத்து புத்துருக்குநெய்வார்த்தாள்
காராவின்நெய்யதனைக் கைரொம்பத்தான்சொரிந்தாள்
அந்தஅடிசல் அமுதுண்டபிற்பாடு
அத்தளிகைமாற்றியே பொற்றளிகைமுன்னேவைத்தாள்
காச்சியபாலும் கற்கண்டுமுப்பழமும்
வாழைப்பழமும் மதுரையின்மாம்பழமும்
வேரின்புறத்தில் வெடித்தபலாப்பழமும்
கொம்புசிறுதேனுங் கோதுபடாமுக்கனியும்
மலையில்சிறுதேனும் மலையாளச்சர்க்கரையும்
இஞ்சியெலுமிச்சை இயலானநார்த்தங்காய்
கொச்சிகளாக்காய் கொடிதானதமர்த்தங்காய்
எடுந்தயிருமாய் எடுத்துவிட்டாளேந்திழையும்
அந்தஅடிசல் அமுதுண்டபிற்பாடு

## கருணர் பொன்னுருவியைச் சேர்ந்தது

பொன்னுருவிநாயகியைப் போய்ப்புணரவிப்பொழுது
ஏழரைநாழிகை அசரடிக்கவேணுமென
மாயன்பெருமாளை மனதிலேதானினைக்க
கர்னன்படுந்துயரம் கடல்வண்ணர்தானறிந்து
அவர்சொல்லைக்கேட்டு அசரடித்தார்மாயவரும்
காஞ்சிவளநாடாளும் கருணர்பெருமாளும்
கன்னிகருங்குழலை கையாலெடுத்தணைத்து
மதிமுகச்சுந்தரத்தை மன்னனெடுத்தணைத்து
வாசனைசந்தனத்தை மனைவியற்குமேனியெல்லாம்
மார்புநிறைந்திடவே மங்கையற்குமேனியெங்கும்
போதவேதான்பூசி பொங்கிமனங்குளிர்ந்து
மங்கைநல்லாள்முடியில் மல்லிகைப்பூமாலைசூடி
கமலத்திருமுகத்திற் கஸ்தூரிப்பொட்டுமிட்டு
கமலத்திருமுகத்தில் கண்ணுக்குமைதீட்டி

மடித்துச்சுருள்கொடுக்க இல்லையேமங்கையரே
மரத்தோடேசேர்ந்ததொரு மங்கையருமானையே
வாய்பேசா அன்னம்போல் வாய்த்தாயேசித்திரமே
வண்டுமுகந்தாப்போல் வஞ்சியே நான்முகந்தேன்
புட்பமுகந்தாப்போல் பொற்கொடியே நான்முகந்தேன்
என்றுசொல்லிகருணரவர் ஏங்கிமனந்தளர்ந்து
ஆரைவெறுத்திடலாம் ஐவரைநொந்திடலாம்
எவரைவெறுத்திடலாம் இனியாரைநொந்திடலாம்
தன்விதியைத்தான்வெறுத்து தனஞ்சயனைப்போது
கட்டில்விட்டுக்கீழிறங்கிக் காவலனும்போய் நடந்தான்
மஞ்சனீர்சாலையிலே வந்தாரேமன்னவரும்
காலோடுகையும் கனிவாயும்சுத்திசெய்து
மார்போடுகையும் மதிமுகமுஞ்சுத்திசெய்து
பாகைவிரித்துடுத்திப் பட்டாடைமேலணிந்து
சிவசிவாவென்று திருநீற்றுக்காப்பணிந்து
அரகராவென்று அணிந்தாரேவெண்ணீறு
இந்திரனைநோக்கி எழில்வீரன்தெண்டனிட்டான்
ஆடையுங்கச்சும் அணிந்தந்த ஆணழகன்
சீருலவும்கச்சும் எடுத்தணிந்தான்தேர்வீரன்
இப்படியாக இவரிருக்கும்வேளையிலே

### பெருந்திருவாள் குமாரனாகிய கர்ணரை ஆசீர்வதித்தது

பேடைமயில்கண்ணாள் பெருந்திருவாளோடிவந்து
காஞ்சிநாடாளும் கருணரெதிரேவந்தாள்
காஞ்சிநாடாளும் கருணரவர்பார்த்து
பூவும்புதுமலரும் பொன்னறுகுஅட்சதையும்
தாயார்தன்பாதத்தில் தார்வேந்தன்தான்சொரிந்தான்
மாதாவின்பாதத்தில் மலர்தூவிதெண்டனிட்டான்
ஆச்சியாள்பாதம் அடிவணங்கித்தெண்டனிட்டான்
தெண்டனிட்டமன்னவனைச் சீர்பெறவேதானெடுத்து
வாழ்வீர்வளர்த்திருப்பீர் வையகத்திலுய்த்திருப்பீர்
நிற்பீர்நிலைத்திருப்பீர் நீடூழிவாழ்ந்திருப்பீர்
போருக்குச்சென்று பொழுதுடனேவென்றிடுவீர்
வென்றகளரியிலே வீரபட்டம்பெற்றிடுவீர்
மாதாமனமகிழ மைந்தர்களைப்பெற்றிடுவீர்
பெற்றோர்மனமகிழப் பிள்ளைகளையீன்றிடுவீர்

வாழ்வீர்காணென்று மனங்குளிரவாழ்த்தினுள்
இருமிருமென்றுசொல்லி இருந்தாரிருவருமாய்
பேடைமயில்கண்ணுள் பெருந்திருவாளப்போது
காஞ்சிநாடாளும் கர்ணர்பெருமாளே
பொன்னுருவிமாளிகைக்குப் போனீரேபுண்ணியரே
காயோபழமோதான் காஞ்சிநாடாண்டவரே
போனதொருகாரியத்தை புண்ணியரேசொல்லுமென்
காஞ்சிநாடாளுங் கருணரவர்கேட்டு [ருள்
ஆச்சி-அழிந்தபழங்காணும் அதோவாராள்பாருமென்
சித்திரத்தூணருகேசெல்வனவன்மறைந்திருந்தான்[று
மாணிக்கத்தூணருகே மன்னன்மறைந்திருந்தான்
இப்படியாக இவரிருக்கும்வேளையிலே

பொன்னுருவி தன்னை அவமானப்படுத்தினவ
ரரரென்று தாதிகளை வினவியது

ஏழரை நாழிகையும் சென்றதிளங்கொடிக்கு
கட்டிச்சுருட்டியவள் கட்டில்விட்டுக்கீழ்க்குதித்து
வாரிச்சுருட்டியந்த மாதவள்தானெழுந்து
தாமக்கருங்குழலாள் தாதியெதிரில்வந்து
தாதி-உடையாரந்தான்குலைந்து ஒட்டியாணம்பூட்டிவி
என்-கமலத்திருமுகத்தில் கஸ்தூரிப்பொட்டுமிட்டு[ட்டு
மங்கையின்பூமுடியில் மல்லிகைப்பூமாலைசூட்டி
என்-வாய்திறந்துதாம்பூலம்வைத்தவரைசொல்லுமென

தாதிகள் பொன்னுருவிக்கு மனந்தேறுதல் சொன்னது

தாய்போல்வளர்ந்தெடுத்த தாதியருந்தான்கேட்டு
கண்டும்பொறுக்காத கணவன் அணைந்தாரோ
பார்த்தும்பொருக்காத பத்தாவணைந்தாரோ
வெளியிலுஞ்சொல்லலாமோ வேல்பொருதுங்கண்ணே
மனதிலிராதோதான் மங்கையிளங்கொடியே [நீ
போதவருந்தடங்கண் பொன்னுருவிதான்கேட்டு
கோபித்துக்கண்சிவந்தாள் கொல்லும்புலியதுபோல்
பற்றியநாகம் பவளம்போல்கண்சிவந்து [து
அவள்-ஆடையொருகைபிடித்துகூந்தலொருகைபிடித்

பொன்னுருவி மாமியாரிடத்தில் வந்து வினவியது

மாமியார்மாளிகைக்கு வாராள்மயில்போல
பேடைமயில்கண்ணுள் பெருந்திருவாள்தான்பார்த்து

மாமியுங்கண்டுமங்கே வாவென்றுதானழைத்தாள்
இங்கேயிருமென்று இடஞ்கூட்டித்தட்டலுற்ருள்
தட்டுங்குழலிடத்தே தார்குழலாள்வீற்றிருந்தாள்
பேடைமயில்கண்ணுள் பெருந்திருவாள்தான்பார்த்து
வந்ததோர்காரியத்தை வாய்திறந்துசொல்லுமென்ருள்
மாமி-உள்ளாடைதான்குலைந்து ஒட்டியாணம்பூட்டுவிட்
கமலத்திருமுகத்தில் கஸ்தூரிப்பொட்டுமிட்டு [டு
மாணிக்கப்பொட்டுமிட்டு வார்குழட்குப்பூமுடித்து
வாய்திறந்துதாம்பூலம்வைத்தவரைசொல்லுமென்ருள்

பெருந்திருவாள் மருமகளாகிய பொன்னுருவிக்கு
மனந்தேறுதல் சொன்னது

பேடைமயில்கண்ணுள் பெருந்திருவாள்தான்கேட்டு
கண்டும்பொறுக்காத கணவனை நீந்தாரோ
பார்த்தும்பொறுக்காத பத்தாவனை நீந்தாரோ
காஞ்சிநாடாளும் கருணரவர்வருவார்
கல்வியிற்சிறந்ததொரு கருணரவர்வருவார்
பின்னெருவர்வருவாரோ பொற்கொடியேயுன்னண்டை
மற்றெருவர்வருவாரோ மயிலனையேயுன்னண்டை
வெளியிலுஞ்சொல்வாரோ வேல்பொருதுங்கண்ணுளே
மனதிலிராதோதாள் மங்கையிளங்கொடியே
பொன்னுருவிநாயகியும் பொற்கொடியுந்தான்கேட்டு
கோபம்பெரிதாகிக் கொம்பனையுந்தான்சீறி
இழிகுலத்தானவனும் எந்தனைத்தீண்டலாமோ
தேர்ப்பாகனென்றுசொல்லித் தீண்டாமல்நானிருந்தே
திருமதுரைக்குள்ளே திருவாழும்வாயிலுள்ளே
கட்டிவரும்பாற்குடங்கள் காவலனர்வாசலிலே
விடுவேனே நானவரை வேல்பொருதுங்கண்ணுளும்
ஆடையொருகைபிடித்துக் கூந்தலொருகைபிடித்து
மாமனுக்குஞ்சொல்வேனென்ருள் மாலைக்கருங்குழலும்
பேடைமயில்கண்ணுள் பெருந்திருவாள்தான்கேட்டு
அத்திபுரத்திற்கு அத்தனைபெண்டுகளும்
மாமனுக்குஞ்சொல்வாரோ மாலைக்கருங்குழலே
ஆணைப்பிறந்தவர்கள் அறிந்தாரேயாமாகில்
வெட்கமுமில்லையோ வேல்பொருதுங்கண்ணுளே
போதேவருந்தடங்கண் பொன்னுருவிநாயகமும்

வீசி நடந்தாளே வீரனுடபொன்னுருவி
மாது நல்லாள்பொன்னுருவி மண்டபஞ்சென்றேறினள்

பொன்னுருவி கெர்ப்பந்தரித்து மசக்கையானது

மங்கை நல்லாள்பொன்னுருவி மசக்கைபெரிதாகி
அன்ன நடையாள் அழுதவிடம்பள்ளிகொள்வாள்
மாது நல்லபொன்னுருவி மசக்கைகுணமாகி
உப்புரைப்பும்வேண்டாம் உரியின்தயிர்வேண்டாம்
காளாஞ்சிவேண்டாம் கடையாத்தயிர்வேண்டாம்
புந்திவிரும்பியது பூசினிக்காய்தன்பேரில்
ஐயர்குளத்து அரிசிவந்தால்சோறிறங்கும்
துய்யர்குளத்து சொராவந்தால்சோறிறங்கும்
கோவிற்பிரசாதம் கொண்டுவந்தாற்சோறிறங்கும்
பாண்டிவளநாட்டார் பசலைவந்தால்சோறிறங்கும்
கட்டிலின்மேலே உறங்காளேகட்டழகி
மெத்தையின்மேலே உறங்காளேமெல்லியரும்
மெத்தையும்கட்டிலும் வெறுத்ததுமெல்லியற்கு
முந்தாணிபோட்டு மொய்குழலும்பள்ளிகொண்டாள்
ஊற்றுத்தண்ணீர்சுரக்கும் உத்தமிக்குஎப்போதும்
அத்தனையுந்தான்சகித்து ஆனந்தவாழ்மாரி
இப்படியாக இவளிருக்கும்வேளையிலே

பெருந்திருவாள் தாதியையழைத்து துற்சடையை
வரவழைக்கச் சொன்னது

பேடைமயில்கண்ணாள் பெருந்திருவாள்தானறிந்து
தாமக்கருங்குழலாள் தாதியரைத்தானழைத்து
தோகைமயிலனையாள் துற்சடைப்பூநாயகத்தை
அரைநாழிகைக்குள் அழைத்துவாதாதியென்றாள்
தாமக்குழலாளுந் தாதியதுகேட்டு
சொன்னசொல்தவறாமல் சுருக்காகத்தானெழுந்து
போறாளவள்தாதி பொன்னாபரணமின்ன
பொற்பிரப்பங்கோல்பிடித்துப் போறாளவள்தாதி
தோகைமயிலனையாள் துற்சடையாள்மாளிசென்றாள்
தோகைமயிலனையும் துற்சடையாள்மாளிகையில்
அவள்-ஆட்டமுங்கூத்து மாரணங்குபார்த்திருந்தாள்
தாமக்குழலாளும் தாதியவளுட்புகுந்து

செம்பொன் திரை நீக்கிச் சேர்வந்துதெண்டனிட்டாள்
அம்பொன் திரை நீக்கி அழகாகத்தெண்டனிட்டாள்
தெண்டனிட்டதாதி திரும்பியெழுந்திருந்து
மோதிரமின்ன முடிமேலேகைதொழுதாள்
தோகைமயிலனையாள் துற்சடையாள்தான்பார்த்து
ஆர்பெண்ணேதாதி அறியவுரையுமென்றாள்
ஆர்பணியுமல்ல அடியேன்றிருப்பணிதான்
மாநகரமாளும் மகராசன்தேவியவள்
பேடைமயில்கண்ணாள் பெருத்திருவாள்தாதியென்றாள்
நீ-இங்குதான்வந்ததை எனக்கறியக்கூறுமென்றாள்
பேடைமயில்கண்ணாள் பெருந்திருவாளுங்களையும்
அரைநாழிகைக்குள் ளழைத்துவரவேணுமென்றாள்

## துற்சடையாள் பெருந்திருவாள் அரண்மனை வந்தது

தோகைமயிலனையாள் துற்சடையாள்தான்கேட்டு
ஆகட்டுமென்றுசொல்லி அப்படிக்கேநல்லதென்று
அவள்-ஆட்டமுங்கூத்தும் அமருமென்றுகையமர்த்தி
கூடவேசோதிமின்ன கொம்பேரிடையாளும்
வீதியும்வீதி தெருவும்பலகடந்து
மாநகரமாளும் மகராசன்மாளிசென்றாள்
பேடைமயில்கண்ணாள் பெருந்திருவாள்முன்னேவந்து
என்னையழைத்தவகை என்மதனிசொல்லுமென்றாள்
உன்னையழைத்தது ஒற்றுற்குறைவுமில்லை
ஆளப்பிறந்தானே அங்கராயன்றேவியற்கு
மாநகரமாளும் மகராசன்றேவியற்கு
காஞ்சிநாடாளும் கருணருடதேவியற்கு
போதேவருந்தடங்கண் பொன்னுருவிநாயகமும்
சோறென்றுங்கேளாளே சொல்லென்றுஞ்சொல்லாளே
கட்டிலின்மேலே படுக்காளேகாரிழையாள்
மெத்தையின்மேலே படுக்காளேமெல்லியரும்
கச்சாயம்வேண்டாளே காளையுடபத்தினியும்
உப்பிட்டபாண்டங்கள் வேண்டாளேஉத்தமியாள்
ஏதுமிறக்கவில்லை இளங்கொடியாள்நாயகிக்கு
ஏதுமிறக்கவில்லை எப்படிக்கோபெண்பிள்ளை
நீ-ஆராந்துபார்த்து அறிக்கையிடவேணுமென்றாள்

துற்சடையாள் தாதியையழைத்து பொன்னுருவியை வரச்சொன்னது

தோகைமயிலணையாள் துற்சடையாள்தான்பார்த்து
தாமக்குழலாளைத் தாதியரைத்தாமழைத்து
காஞ்சிநாடாளுங் கருணருடதேவியரே
மாநகரமாளும் மகராசன்தேவியரை
நானழைத்தேனென்றுசொல்லி நீயழைத்துவாருமென்
தாமக்குழலாளுந் தாதியருந்தான்கேட்டு [ருள்
அருளருளுமென்னுச்சி அப்படிக்கேயாகுதென்று
போருளவள்தாதி பொன்னுபரனமின்ன
பொற்பிரப்பங்கோல்பிடித்துப் போருளவள்தாதி
போதேவருந்தடங்கண் பொன்னுருவிமாளிசென்று
தென்னுடிபள்ளிகொள்ளும் சித்திரக்கூடம்வந்து
வளநாடிபள்ளிகொள்ளும மாணிக்கக்கூடம்வந்து
செம்பொன்திரைநீக்கிச் சேரவந்துதெண்டனிட்டாள்
அம்பொன்திரைநீக்கி அழகாகத்தெண்டனிட்டாள்
தெண்டனிட்டாள்தாதி திரும்பவெழுந்திருந்து
மோதிரமின்ன முடிமேலேகைதொழுதாள்
போதேவருந்தடங்கண் பொன்னுருவிதான்பார்த்து
நீ-ஆர்பெண்ணே தாதி அறியஉரையுமென்ருள்
மாநகரமாளும் மகாராஜன்தேவியற்கு
பேடைமயில்கண்ணுள் பெருந்திருவாள்தாதியென்ருள்
நீ-இவ்விடம்வந்ததை எனக்கறியச்சொல்லுமென்ருள்
பேடைமயில்கண்ணுள் பெருந்திருவாள் நாயகமும்
உன்னை-அரைநாழிகைக்குள் ளழைத்துவாவென்ருளே
ஆகையினுலே அடியேனும்வந்தேனே [டாள்
வாருமம்மாவென்றுசொல்லி வருந்தியேதெண்டனிட்

பொன்னுருவி பெருந்திருவாளிடம் வந்தது

போதேவருந்தடங்கண் பொன்னுருவிதான்கேட்டு
அவள்-ஆகட்டுமென்றுசொல்லி அப்படியேநல்ல
கால்சோரகைசோர கட்டழகிமெல்லியரும் [தென்று
இடையும்நடைசோர்ந்து ஏலக்கருங்குழலும்
அஞ்சிவழிநடக்க அவளோடேகொஞ்சிவர
கொஞ்சிகொஞ்சிவழிநடந்தாள் கோதைமயிலணையும்
சித்திரவீதி தெருவும்பலதாண்டி

தேரோடும்வீதி தெருவும்பலதாண்டி
மா நகரமாளும் மகராசன்மாளிசென்று
பேடைமலர்கண்ணாள் பெருந்திருவாள்முன்னேவந்து
என்னையழைத்தவகை எதுவகைசொல்லுமென்றாள்,
உன்னையழைத்தது ஒன்றுற்குறைவுமில்லை
தோகைமயில்கண்ணாள் துற்சடையாள்தானழைத்தாள்

துற்சடையாள் பொன்னுருவியை அலங்கரித்து
கெற்பந் தரித்ததைச் சொன்னது

அதுக்குள்ளே துற்சடையா ளாரணங்குமேதுசெய்தாள்
மல்லிகைப்பூகொண்டுவந்து மாதர்க்குமுன்னேவைத்து
இந்தாருமென்றாளே ஏலக்கருங்குழலாள்
போதேவருந்தடங்கண் பொன்னுருவிதான்பார்த்து
சரமல்லிப்பூவானால் சந்தோஷம்மாதருக்கு
குடமல்லிப்பூவானால் கொண்டாட்டம்மாதருக்கு
ஒருகையால்வாங்காமல் இருகையால்தான்வாங்கி [தாள்
அவ-ளிருகையால்தான்வாங்கி ஏந்திழையும்வீற்றிருந்
தோகைமயிலனையாள் துற்சடையாள்தான்பார்த்து
தேசத்தையாளும் துரியோதனப்பெருமான்
பூப்போட்டசேலை தந்தாரேயெந்தனுக்கு
பொன்போட்டசேலை தந்தாரேயெந்தனுக்கு
இருவருமாக சரிபார்ப்போம்வாருமென்று
மேல்சுத்து ஆடைதனை மெல்லியரும்தான்பார்த்தாள்
இதுபுதுமையிதுபுதுமை யானெங்குங்கண்டதில்லை
தோகைமயிலனையே துற்சடையேயென்றுசொல்ல
இருவர்முந்தாணிகளை இழுத்தந்த துற்சடையாள்
போதேவருந்தடங்கண் பொன்னுருவிபட்டாடை
பற்றியிழுத்தாளே பாவைகருங்குழலும்
வட்டஸ்தனமழகும் மட்டில்வடிவழகும்
கட்டுங்குழையழகும் கையில்வளையழகும்
மார்பில்ஸ்தனமழகும் மச்சத்தின்வடிவழகும்
மச்சுவீடுபோலே மலர்ந்தஸ்தனமிரண்டும்
பச்சைநரம்பு பசுநரம்பைத்தான்பார்த்து
தோகைமயிலனையாள் துற்சடையாள்கூறலுற்றாள்
அத்திபுரத்திற்கு அரசாளப்புத்திரனை
புத்திரனைப்பெற்றெடுத்து புகழ்பெருவாய்தப்பாது

புத்திரனேஎன்றவுடன் பொன்னுருவிதான்கேட்டு
கோபம்பெரிதாகிக் கொம்பனையும்கூறலுற்ருள்
விளம்பிவிளம்பி நீ போடீவிளம்பி நீ
போடீவிளம்பி நீ பொல்லாத துற்சடைதான்
என்று-வீசிநடந்தாளே விசையுடனேபொன்னுருவி
அன்ன நடையாள் அழுதவிடம்பள்ளிகொண்டாள்
தங்கத்தால்மெத்தை தழுவணையுமேறலுற்ருள்
கண்ணுடி தான் துடைத்து வடிவுகளைக்காணலுற்ருள்
மார்பின்ஸ்தனமழகும் மட்டற்றவடிவழகும்
மச்சவீடுபோலே மலர்ந்தஸ்தனமழகும்
பச்சைநரம்பு பசுநரம்பைத்தான்பார்த்து
பிள்ளையிதுவென்று பொற்கொடியுந்தானினைந்து
மைந்தரிதுவென்று மங்கையருந்தானினைந்து
கோபம்பெரிதாகிக் கொம்பனையுமப்போது
மனதுகொதித்துமே மாதுநல்லாளப்போது

பொன்னுருவி தன் கணவனுகிய கருணரை தூஷித்தது

இழிகுலத்தான்பிண்டத்தை இனிதீண்டப்போறேனே
தேர்ப்பாகன்பிண்டத்தைத் தீண்டேனிருகையால்
சாதிகெட்டான்பிண்டத்தைச் சற்ருகிலுந்தீண்டேன்
காஞ்சிநாடாளும் கருணரைவிட்டேனே
கர்ப்பூரந்தின்று கருவைக்குலைப்பேனென்ருள்
காசுண்டை தின்று கருவைக்கரைப்பேனென்ருள்
இனியமருந்துதின்று இற்றுவிழக்காணேனென்பாள்
தாய்போல்வளர்த்தெடுத்த தாதியரைத்தானழைத்தாள்
பிறந்துவளர்ந்து பிராயமிருபதாச்சே
இதுநெடுநாள்கண்டதில்லை இப்பெரிய துக்கத்தை
ஐயமாரெல்லாம் அடங்கலுமாண்டிருக்க
ஆச்சிமாரெல்லோரும் அடங்கலுமாண்டார்கள்
எனக்குவந்த துக்கத்தை என்னென்றுசொல்லுவேன்
காஞ்சிவடநாடாளும் கருணருமிங்குவந்து
நித்திரைசோதித்து லீலைபுரிந்தானும்
கள்ளன்திருடனைப்போல் கட்டழகன்படுபாவி
மாயமருந்தாலே மயக்கினனென்னையவன்
பார்த்தேனேயாமானல் பாணத்தால்போட்டிடுவேன்
அறிந்தேனேயாமானல் அப்பாலேபோட்டிடுவேன்

கண்டேனேயாமானல் கண்டதுண்டஞ்செய்திடுவேன்
பிள்ளையுண்டாக்கினன் பொல்லாதபட்டிமகன்

பொன்னுருவி கருவை யழிக்க எத்தனஞ் செய்தது

பிள்ளைகரைக்கவேணும் பொற்கொடியேயிப்போது
மைந்த்ரைக்கரைக்கவேணும் மயிலணையேயிப்போது
கற்பூரந்தின்றாலே பிண்டங்கரைந்துவிடும்
உந்தனிடத்திலே கற்பூரமுண்டோவென்றாள்
கற்பூரந்தந்தாலே கட்டழகிநானிருப்பேன்
கற்பூரமில்லையென்றால் இப்போதுமாண்டிடுவேன்
தாய்போல்வளர்த்தெடுத்த தாதியவள்தான்கேட்டு
வேணுமெனறகற்பூரம் அழைப்பித்துத்தாரேனென்று
போருளவள்தாதி பொன்னுபரணமுமாய் [ள்
பொற்பிரப்பங்கோல்பிடித்து போருளவள்தாதி
வீதியும்வீதி தெருவும்பலதாண்டி
தேரோடும்வீதி தெருவும்பலதாண்டி
மாநகரமாளும் மகாராசன்றன்சபைக்கு
தேசத்தையாளும் துரியோதனப்பெருமாள்
கொலுவிருக்கும்வேளையில் கொம்பனையாள்வந்துநின்
சிங்காதனத்திற்கு முன்பாகத்தெண்டனிட்டாள் [று
தெண்டனிட்டதாதியரும் திரும்பயெழுந்திருந்து
மோதிரமின்ன முடிமேலேகைதொழுதாள்
தேசத்தையாளும் துரியோதனப்பெருமாள்
நீர்-ஆர்பெண்ணேதாதி அறியவுரையுமென்றான்
ஆர்பணியுமல்ல அடியேன்திருப்பணிதான்
பிறர்பணியுமல்ல பெருமாளுடபணிதான்
போதேவருந்தடங்கண் பொன்னுருவிதாதியென்றாள்
இங்கேநீவந்தவகை எனக்கறியச்சொல்லுமென்றான்

பொன்னுருவி தாதியையனுப்பி துரியோதனனிடத்தில்
கற்பூரம் வாங்கிவரச் சொன்னது

உந்தனிடத்திலே கற்பூரம்வேணுமென்று
மாதுநல்லபொன்னுருவி வாங்கிவரச்சொன்னள்காண்
கற்பூரம்வேணுமென்றுகைதொழுதுதெண்டனிட்டாள்
தேசத்தையாளும் துரியோதனன்கேட்டு
கட்டழகிமாதருக்கு கற்பூரம்யேதுக்கென்றான்
தாமக்குழலாளுந் தாதியருந்தான்கேட்டு

அது-இன்னவகையென்று ஏதொன்றுநாமறியோம்
மாதுமயிலணையாள் வாங்கிவரச் சொன்னாள்காண்
தேசத்தையாளுந் துரியோதனன்கேட்டு
கட்டழகிமாதருக்குக் கற்பூரம்வேணுமோதான்
வேணுமென்றகற்பூரம் வேண்டியதுதாரேனென்றான்

பெருந்திருவாள் துரியோதனனைக்கண்டு கற்பூரம்
கொடுக்கவேண்டாமென்று மறுத்தது

பேடைமயிற்கண்ணாள் பெருந்திருவாளோடிவந்து
தேசத்தையாளுந் துரியோதனன்முன்னேவந்து
ஊராளும்மன்னா ஒருவார்த்தைநீர்கேளும்
நாடாளும்மன்னா நல்வார்த்தைநீர்கேளும்
பொன்னுருவிசித்தடிக்குப் புகல்வார்த்தைநீர்கேளும்
ஐந்துமோர்திங்க ளாச்சுதுகாண்மாதருக்கு
கரும்புஅரும்பிட்டுக் கஸ்தூரிபூத்ததுபோல்
கல்லாற்றுக்குள்ளே கதலிமுளைத்ததுபோல்
அத்திமரம்பூத்ததுபோல் அன்னநடைபொன்னுருவி
மாதுநல்லபொன்னுருவி மைந்தருமுண்டானாள்
கற்பூரந்தின்றாலே பிண்டந்தரியாது
பிண்டந்தரியாது பொற்கொடியாள்மாண்டிடுவாள்
கற்பூரமில்லையென்று கடுகவுரையுமென்றாள்

துரியோதனன் பொன்னுருவி கற்பந்தரித்ததைக்
கேல்வியுற்று மனக்களிப்படைந்தது

தேசத்தையாளும் துரியோதனன்கேட்டு
பூரித்திருதோளும் பொன்னாபரணமின்ன
இதயங்குளிர்ந்து இருதோளும்பூரித்து
நானுமறிவேனடி நலமானகாரியத்தை
தாமக்குழலாளைத் தாதியரைத்தாமழைத்து
காஞ்சிநாடாளுங் கருணர்கடையிலே
அங்கேயுண்டுகற்பூரம் இங்கில்லையென்றுரைத்தார்
தாமக்குழலாளுந் தாதியருந்தான்கேட்டு
போருளவள்தாதி பொன்னாபரணமின்ன
பொற்பிரப்பங்கோல்பிடித்து போருளவள்தாதி

பொன்னுருவி தாதி கருணரிட மாளிகை வந்தது

காஞ்சிநாடாளுங் கருணருடவீதிவந்தாள்
காஞ்சிநாடாளுங் கருணருடமாளிகையில்

வாசற்படிகாக்கும் வாழ்பாண்டியமன்னவர்கள்
நீ-ஆர்பெண்ணேதாதி அறியவுரையுமென்ருர்
நீ-ஏன்வந்தாய்தாதி எனக்கறியக்கூறுமென்ருர்
தாமக்குழலாளுந் தாதியருந்தான்கேட்டு
வாயைத்திறவாளாம் மறுவார்த்தைபேசாளாம்
மவுனமாய்த்தானிருந்தாள் மாதுகருங்குழலும்
வாசற்படிகாக்கும் மன்னவர்களேதுசொல்வார்
கூடாதமங்கையற்குக் கொம்பனையேதாதிகளா
வாழாதமாதவட்கு மயிலனையேதாதிகளா
கன்னியவள்கற்பழித்த பேய்ச்சிகளோ நீங்கள்தான்
பெண்ணவள்வாயழித்த பைங்கொடியே நீங்கள்தான்
தாய்போல்வளர்த்தெடுத்த தாதிகளுந்தான்கேட்டு
ஏதொன்றுஞ்சொல்லாமல் ஏலக்கருங்குழலும்
உட்கட்டிற்போய்புகுந்தாள் உத்தமியாள்தாதியரும்
காஞ்சிவளநாடாளுங் கருணருமப்பொழுது
கனகமணிக்கட்டிலின்மேல் கர்ணரும்பள்ளிகொண்டார்

## தாதிகள் கருணரைக் கற்பூரங் கேட்டது

தாமக்குழலாளுந் தாதியருமோடிவந்து
செம்பொன்திரை நீக்கிச் சேரவந்துதெண்டனிட்டு
அம்பொன்திரை நீக்கி அழகாகத்தெண்டனிட்டாள்
தெண்டனிட்டதாதி திரும்பஎழுந்திருந்து
மோதிரமின்ன முடிமேலேகைதொழுதாள்
காஞ்சிநாடாளுங் கருணரவர்பார்த்து
நீ-ஆருடையதாதி அறியவுரையுமென்ருள்
தாமக்கருங்குழலாள் தாதியருமேதுசொல்வாள்
ஆருடையதாதியல்ல அடியேன்றிருப்பணிதான்
பேர்பணியுமல்ல பெருமாள்திருப்பணிதான்
போதேவருந்தடங்கண் பொன்னுருவிதாதியென்ருள்
இங்கேநீவந்தவகை எனக்கறியக்கூறுமென்ருன்
ஏன்வந்தாய்தாதி எனக்கறியக்கூறுமென்ருன்
போதேவருந்தடங்கண் பொன்னுருவிநாயகிக்கு
கட்டழகிமாதருக்குக் கற்பூரம்வேணுமென்ருள்
கணவனிடத்திலே கற்பூரமுண்டென்று
வாங்கிவரச்சொன்னுள்காண் மாதுகருங்குழலாள்
காஞ்சிநாடாளுங் கருணரவர்கேட்டு

பூரித்திருதோளும் பொன்னுபரணமின்ன
இதயங்குளிர்ந்து இருதோளும்பூரித்து
வாழாதபெண்களுக்கு கற்பூரம்வேண்டியதோ
கூடாதபெண்களுக்குக் கற்பூரம்வேண்டியதோ
என்னையொருபொருட்டாகக் கற்பூரம்கேட்டாளோ
எந்தனையுங்கேட்க இங்கனுப்பிவைத்தாளோ
அவளுக்கு-எதுக்குகற்பூரம் எனக்கறியச்சொல்லுமெண

துற்சடையாள் கருணருக்குச்சொல்லி கற்பூரம் கொடுக்காமற் றடுத்தது

தோகைமயிலனையாள் துற்சடையாள்தான்கேட்டு
ஊராளுமன்ன ஒருவார்த்தை நீகேளும்
நாடாளுமன்ன நல்வார்த்தை நீர்கேளும்
சேயிழையும் நானும் சேரத்துகில்புனைந்தோம்
மாது நல்லபொன்னுருவி மைந்தருமுண்டானாள்
கரும்புகுறும்பிட்டு கஸ்தூரிபூத்தாப்போல்
கல்லாற்றுக்குள்ளே கதலிமுளைத்தாப்போல்
மலடுள்ளவாசலுக்கு மைந்தர்களுமுண்டாச்சு
அம்பலத்துவாசலுக்கு ஆண்பிள்ளைபெற்றிடுவாள்
கற்பூரந்தின்றாலே பிண்டந்தறியாது
பிண்டந்தரியாது பொற்கொடியாள்மாண்டிடுவாள்
செத்துமடிந்திடுவாள் சிவலோகஞ்சேர்ந்திடுவாள்
மாண்டுமடிந்திடுவாள் வைகுண்டஞ்சேர்ந்திடுவாள்
கற்பூரமில்லையென்று கடுகவுரையுமென்றாள்
காஞ்சிநாடாளுங் கருணரவர்கேட்டு
இதயங்குளிர்ந்து இருதோளும்பூரித்து
உள்ளங்குளிர்ந்து உடம்பெல்லாம்பூரித்து
நானுமறிவேனடி நவில்வாயிளம்பிறையே
எனக்குத்தெரியுமேதான் ஏலக்கருங்குழலே
படுக்கைதனைத்தட்டி பச்சைவடமுதறி
துப்பட்டிதானுதறி துரைமகன்தான்போர்த்து
முத்துமிதியடியாம் மேற்குமிழ்கள்ரத்தினமாம்
செம்பொன்மிதியடிமே லேறியந்தச்சிர்கருணர்
தெத்துத்தெருதாண்டி தேரோடும்வீதிவந்து
கொத்தம்பூமன்னருடன் கொடைதாரைதானழைத்தார்
கொத்தம்பூமன்னவர்கள் கொடைதாரையுடன்வந்தார்
முத்துக்குடையாம் முழுமாணிக்கப்பொற்குடையாம்

தங்கக்குடையாம் தவளநெடுங்குடையாம்
பொன்னுக்குடையாம் புகழுடையமுக்குடையாம்
எடுத்து நிறைத்தார்கள் எண்ணுயிரங்குடைகள்
பக்கம் நிறைந்தார்கள் பதினுயிரங்குடைகள்
சுற்றி நிறைந்தார்கள் சூரியரைக்காணுர்கள்
ஒற்றைக்குடை நடுவில் இருந்த நந்தவுத்தமர்கள்
பூச்சக்கரக்குடை நடுவில் இருந்தநந்தப்புண்ணியர்கள்

கருணமகாராஜன் பறையறையுஞ் சாம்புவரை
அழைத்து சகல வர்த்தகரும் கற்பூரம் விற்காதிருக்கும்படி
பறைசாற்றச் சொன்னது

பறையறையும்மன்னவரை சாம்புவரைத்தானழைக்க
பறையறையும்மன்னவர்கள் சாம்புவர்களோடிவந்து
தூரவிருந்து தொழுதிரங்கித்தெண்டனிட்டு
என்னையழைத்தபணி ஏதுபணியெம்பெருமாள்
உன்னையழைத்தது ஒன்றுற்குறைவுமில்லை
அத்திபுரத்தில் அறுபதுகடைகளுண்டே
அந்தக்கடைதனிலே ஆறெருருவர்கற்பூரம்
விற்ருர்களானுக்கால் வீரசொர்க்கஞ்சேர்த்திடுவேன்
ஆறெருருவர்கற்பூரம் கொண்டதையுண்டானல்
ஊருக்குமேற்கே உயிர்கழுவுபோட்டிடுவேன்
தாமமணிகட்டி தறித்துவைப்பேன்பூமுடியை
நாக்கோடேமூக்கறிந்து நகர்விட்டுவோட்டிவைப்பேன்
அப்படிக்கென்று அரசுமுழக்குமென்றுன்

சகல ராஜருமறியும்படிச் சாம்புவர்கள்
பறையறைந்தது

பறையறையுமன்னவர்கள் சாம்புவர்கள்தான்கேட்டு
அருளருளுமென்னையா அப்படிக்கேயாகுதென்று
வெள்ளியால்பறைகொண்டு வெண்கலத்தால்கோலுணி
யானையின்மேலேவைத்து அலங்காரம்போடலுற்ருர்
அத்திபுரத்துப் பெருந்தெருவேவந்துநின்று
அடித்தார்தமுக்கோசை அந்நகருதானதிர
அடித்தார்தமுக்கோசை அந்நகரில்தான்கேட்டு
சிலமன்னரெல்லோரும் திடுக்கிட்டெழுந்திருந்து
வர்த்தகரும்செட்டிகளும் வருத்தமுடன்தானெழுந்து
கடைக்காரரெல்லாம் கணமுடனேதானெழுந்து

என்னமோகாரணமோ ஏதொன்று நாமறியோம்
பறையறையுமன்னவர்கள் பார்மன்னர்முன்னேவந்து
ஏதுக்கரைந்தீர்காண் எனக்கறியக்கூறுமென்ருர்
பறையறையுமன்னர்களும் சாப்புவருந்தான்கேட்டு
காஞ்சிநாடாளுங் கருணருடவுத்திரவு
ராசாக்கள்காரியங்கள் நாமறியக்கூடாது
கஸ்திரிர்காரியங்கள் கலக்கம்வெளிப்படுமோ
இந்த-அத்திபுரத்திலே அறுபத்திரண்டுகடை
ஆரொருவர்கற்பூரம் விற்றதேயுண்டானல்
ஆரொருவர்கற்பூரம் கொண்டதேயுண்டானல்
ஊருக்குமேற்கே உயிர்க்கழுவுபோட்டிடுவேன்
தாமமணிகட்டி தரித்துவைப்பேன்பூமியிலே
நாக்கோடேமூக்கறிந்து நகர்விட்டுஒட்டிடுவேன்
அப்படிக்கென்று அறைந்தேன்தமுக்கென்ருன்
கடைக்காரர்தான்கேட்டு கலங்கிமனந்தளர்ந்து
கற்பூரச்சரக்கையெல்லாம் கட்டியொருபுறமாய்
கட்டியொருபுறமாய் கடலிலேவிட்டெறிந்தார்
இப்படியாக இவரிருக்கும்வேளையிலே
தாமக்குழலாளுந் தாதியவளேதுசெய்வாள்
தாமக்குழலாளுந் தலைவிரித்தோடலுற்ருள்
போதேவருந்தடங்கண் பொன்னுருவிமாளிசென்ருள்
போதேவருந்தடங்கண் பொன்னுருவி நாயகமும்
வாசற்படியிருந்து மயிலேயும்பார்த்திருந்தாள்
தாமக்குழலாளுந் தாதிகளுமுன்னேவந்து
கற்பூரத்திற்குப்பட்ட களையெல்லாம்போதுமென்ருள்
எந்தனுக்குங்கிட்டாது ஏலக்கருங்குழலே
போதேவருந்தடங்கண் பொன்னுருவிதான்கேட்டு
நீ-தாதியொருத்தி தரமறிப்பாயென்றறியேன்
அன்னநடையா ளழுதவிடம்பள்ளிகொண்டாள்
கற்பூரங்கிட்டலேயோ காளையதுபட்டணத்தில்
என்றுமவள்சொல்லி யிருக்கிறவேளையிலே

பொன்னுருவி தாதிகளை மாங்காய் கேட்டதின்மேல்
இல்லையென்றுரைத்தது

மயிலேயாள்பொன்னுருவி மசக்கைக்குணமாகி
மாதுநல்லாள்பொன்னுருவி மாங்காய்மனதாகி

தாய்போல்வளர்த்தெடுத்த தாதியரைத்தானழைத்து
எந்தன்தனக்கு ஒருமாங்காய்வேண்டுமென்றாள்
தாமக்குழலாளுந் தாதியருந்தான்கேட்டு
நான்-கற்பூரங்கொள்ள கடையெல்லாஞ்சுற்றிவந்தேன்
காஞ்சிநாடாளுங் கருணரவர்பார்த்து
கடைகள்கடைத்தெருவில் கட்டியடித்தாரே
கற்பூரத்திற்குப்பட்ட கஸேயெல்லாம்போதுமம்மா
மாங்காயுங்கிட்டாது மாலைக்கருங்குழலே
உன்-மாமிபெருந்திருவாள் மயிலணையைக்கேட்டாலே
வேண்டுமென்றமாங்கனிகள் வேணதுதான்தருவாள்
அங்கேநீகேளுமென்றாள் ஆரணங்குதாதியரும்

பொன்னுருவி பெருந்திருவாளை மாங்கனி கேட்டது

போதேவருந்தடங்கண் பொன்னுருவிதான்கேட்டு
மாமியார்மாளிகைக்கு வாராள்மயிலணையாள்
மாமியார்கண்டங்கே வாராய்மயிலணையாய்
இங்கேயிருமென்று இடஞ்சுட்டித்தட்டலுற்றார்
தட்டுங்குழலிடத்தே தார்குழலாள்வீற்றிருந்தாள்
பேடைமயில்கண்ணாள் பெருந்திருவாள்தான்பார்த்து
வேர்க்கவிருவிருக்க வந்தஅவசரமேன்
வந்ததொருகாரியத்தை வகைதெரிந்துகூறுமென்றாள்
போதேவருந்தடங்கண் பொன்னுருவிகூறுவாள்
ஆரங்கந்தானடி அம்மானார்தானடி
பந்தாடிசெண்டாடி பள்ளாங்குழியாடி
ஒற்றைக்கால்மண்டபத்தில் உஞ்சல்கயிறுடி
பளிங்குமாமண்டபத்தில் பைங்கிளிநான்வீற்றிருந்தேன்
ஏதோவிடாய்பெரிதாய் மாங்காய்மனதாச்சு
உந்தனிடத்தில் ஒருமாங்காய்வேணுமென்றாள்
பேடைமயில்கண்ணாள் பெருந்திருவாள்தான்கேட்டு
வேணுமென்றமாங்கனிக ளழைப்பித்துதாரேனென்று [ள்
தோகைமயிலணையாள் துற்சடையாளோடிவந்து
ஊராளுமாமி ஒருவார்த்தைநீர்கேளும்
நாடாளுமாமியொரு நல்வார்த்தைநீர்கேளும்
போதேவருந்தடங்கண் பொன்னுருவிநாயகமும்
மாங்காயும்கேட்டாளே மாலைக்கருங்குழலும்
ஒரு-மாங்காய்க்கீத்தானலு மகனேடேபேசவைப்போம்

மாங்கனிக்குத்தானுக கருணருடன்பேசவைப்போம்
மாங்காயுமில்லையென்று மாதற்குறையுமென்ருள்

பெருந்திருவாள் பொன்னுருவியை உன் மாமனுரை
மாங்கனிகேளென்று சொன்னது

பேடைமயில்கண்ணுள் பெருந்திருவாள்தான்கேட்டு
அப்படியேசம்மதித்தாள் ஆரணங்குமப்பொழுது
போதேவருந்தடங்கண் பொன்னுருவி நாயகியை
உங்கள்-மாமாவைக்கேட்டாலே தருவாரேமாங்கனியும்
அங்கேயுண்டுமாங்கனிகள் இங்கில்லையென்றுரைத்தாள்
போதேவருந்தடங்தண் பொன்னுருவிதான்கேட்டு
மாமனுர்மாளிகைக்கு வாராள்மயில்போலே
தேசத்தழகன் துரியோதனப்பெருமான்
காஞ்சிநாடாளுங் கருணருடன்கூட
சாயாம்புமேனி சகுனியவன்கூட
சொக்கட்டான்சூது சதுரங்கந்தானுடி
போகின்றமன்னருக்குப் போகவிடைகொடுத்து
அங்கிருந்தமன்னர்களை அனுப்பிவிடைகொடுத்து
தனியாகவீற்றிருந்தான் தாமமுடியானும்

பொன்னுருவி துரியோதனனை மாங்கனிகேட்டது

போதேவருந்தடங்கண் பொன்னுருவி நாயகியும்
மாமனெதிரில்வந்து மாலைக்கருங்குழலும்
வணங்காமுடியும் வயிரத்திரைகுழலாள்
மாங்காய்க்குத்தானுக மாமாவைத்தெண்டனிட்டாள்
தேசத்தையாளுந் துரியோதனன்பார்த்து
என்னவென்றுதெண்டனிட்டாய் பிள்ளைகளைப்பெற்றிடு
தெண்டனிட்டகாரியம் தெரியவுரையுமென்ருள் [வாய்
போதேவருந்தடங்கண் பொன்னுருவிகூறுவாள்
ஆரங்கந்தானுடி அம்மானுர்தானுடி
பந்தாடிசெண்டாடி பள்ளாங்குழியாடி
ஒற்றைக்கால்மண்டபத்தில் உஞ்சல்கயிருடி
பளிங்குமாமண்டபத்தில் பைங்கிளியாள்வீற்றிருந்தேன்
ஏதோவிடாய்பெரிதாய் ஒருமாங்காய்மனதாகி
உந்தனிடத்திலே ஒருமாங்காய்வேணுமென்ருள்
தேசத்தையாளுந் துரியோதனன்தான்கேட்டு

மாங்கனிகேட்கவந்த மங்கையரைத்தான்பார்த்து
இத்தனை நாளில்லாதே இதுநெடுநாளன்றியிலே
நீ-மாங்காய்கேட்கக் காரியமேன்மங்கையரே
போதேவருந்தடங்கண் பொன்னுருவிதான்கேட்டு
உப்புரையவேண்டலையே உரியில்தயிர்வேண்டலையே
காட்டாஞ்சிவேண்டில்லை கச்சாயம்வேண்டில்லை
ஏதோவிடைபெரிதாய் ஒருமாங்காய்மனதாகி
ஒருமாங்காய்வேணுமென்று உத்தமியுந்தெண்டனிட்
தேசத்தையாளுந் துரியோதனன்கேட்டு [டாள்
பூரித்திருதோளும் பொன்னுபரணமின்ன [ருள்
வேணுமென்றமாங்கனிகளழைப்பித்துத்தாரேனென்

பெருந்திருவாள் துரியோதனனை பொன்னுருவிக்கு மாங்கனி கொடுக்கவேண்டாமென்று சொன்னது

பேடைமயில்கண்ணாள் பெருந்திருவாளோடிவந்து
மாநாகங்கொண்ட மகாராஜன்முன்னேவந்து
அவள்-கண்ஜாடைகாட்டினாள் கமலப்பூநாயகியாள்
தேசத்தையாளும் துரியோதனன்தான்பார்த்து
தனியேயெழுந்துவந்தான் தாமமுடியானும்
பேடைமயில்கண்ணாள் பெருந்திருவாள்நாயகமும்
மறைவாகவந்தாளே மாலைக்கருங்குழலும்
தேசத்தழகன் துரியோதனனுடனே
மாலைமுடியாளும் மயிலணையுங்கூறலுற்றாள்
ஊராளும்மன்னா ஒருவார்த்தை நீர்கேளும்
நாடாளும்மன்னா நல்வார்த்தை நீகேளும்
போதேவருந்தடங்கண் பொன்னுருவி நாயகியும்
மாங்காயுங்கேட்டாளே மாலைக்கருங்குழலும்
மாங்காயுமில்லையென்று மன்னவரே நீருரைத்தால்
மாங்காய்க்குத்தானாக மகனோடேபேசவைப்போம்
ஒரு-மாங்காய்க்குத்தானாக கருணருடன்பேசவைப்போம்
மாங்காயுமில்லையென்று மன்னவரேசொல்லுமென்றாள்
தேசத்தழகன் துரியோதனன்தான்கேட்டு
பூரித்திருதோளும் பொன்னுபரணமின்ன
இதயங்குளிர்ந்து இருதோளும்பூரித்து
உள்ளங்குளிர்ந்து உடம்பெல்லாம்பூரித்து
அப்படிக்கேசெய்வேனென்றான் ஆனந்தவாழ்மார்பன்
போதேவருந்தடங்கண் பொன்னுருவிமுன்னேவந்து

துரியோதனன் மாங்கனி இல்லையென்று சொல்ல
பொன்னுருவி விசனமடைந்தது

போதேவருந்தடங்கண் பொன்னுருவி நாயகமும்
காஞ்சிநாடாளுங் கருணருடசோலையிலே
அங்கேயுண்டுமாங்கனிக ளிங்கில்லையென்றுரைத்தார்
போதேவருந்தடங்கண் பொன்னுருவிதான்கேட்டு
ஊராளும்மாமா ஒருமாங்காய்க்கிட்டாதோ
நாடாளும்மாமா நல்மாங்காய்க்கிட்டாதோ
என்-ஐயமார்பாண்டியர்கள் அரசாளும்நாளையிலே
என்-ஆச்சிமாரெல்லாரும் இருக்கின்றநாளையிலே
சாக்கடைகள்தோறும் சரிந்துவிழுமாங்கனிகள்
புறக்கடைகள்தோறும் பெருத்துவிழுமாங்கனிகள்
அடித்துப்பழங்கொடுக்க ஆருண்டுவையகத்தில்
திட்டிப்பழங்கொடுக்கத் திக்கற்றபாவியானேன்
என்றுசொல்லிமங்கையரும் ஏங்கிப்புலம்பலுற்ருள்
கூவியழுதாளே கொம்பின்கிளிபோலே
கோபித்துத்தானழுதாள் கோயிலன்னம்போலாக
வாய்திறந்துதானழுதாள் மாது நல்லபொன்னுருவி

பொன்னுருவி விசனப்படுவதைக்கண்டு துரியோதனன்
மாங்கனி கொடுக்கிறேனென்றது

தேசத்தையாளுந் துரியோதனன்பார்த்து
சிந்தைகலங்கி திடுக்கிட்டுத்தானெழுந்து
மன்னன்மனஞ்சலித்து மறுவார்த்தையேதுரைப்பான்
போதேவருந்தடங்கண் பொன்னுருவி நாயகமே
நாளை-மத்தியானவேளைக்கு வந்தாயேயாமானல்
வேணுமென்றமாங்கனிகளழைப்பித்துதாரேனென்ருர்
போதேவருந்தடங்கண் பொன்னுருவிதான்கேட்டு
அவளாகட்டுமென்றுசொல்லி அப்படிக்கேநல்லதென்
சந்தோஷப்பட்டாள் சரீரங்கள்பூரித்தாள் [று
அமர்ந்தநடையுடனே ஆனந்தவாழ்மாரி
அவள்-அன்னநடையுமே ஆலித்துப்பள்ளிகொள்ள
தங்கத்தால்மெத்தை தழுவணையின்மீதுசெல்வாள்
மாதுநல்லபொன்னுருவி மசக்கைகுணமாகி
மாதுநல்லபொன்னுருவி மாங்காய்மனதாகி
இப்படியாக இருக்கின்றவேளையிலே

பொழுதுவிடிந்தது பொற்கோழிகூவிற்று
கங்குல்விடிந்தது கதிரோனும்வந்துதித்தான்
ஈஸ்வரனர்கோவிலுக்கு திருக்காப்புசென்றது
தேசத்தழகன் துரியோதனப்பெருமான்
பள்ளிவிட்டுக்கிழிறங்கி பங்கயஞ்சீர்கண்ணனும்
மாலைமுடியானும் மல்லிகைப்பூநின்றுதறி
பாகைவிரித்துப் பட்டாடைமேல்சாத்தி
முத்துமிதியடியைத் தொட்டுமிகநடந்து
அரண்மனையேழுகட்டும் அன்பாகத்தான்கடந்து
தெற்குத்தெருதாண்டி தேரோடும்வீதிவிட்டு
வைகைக்கரைதனிலே வந்தாரேயப்பொழுது
முல்லையிதழொடித்து முத்துப்போல்பல்விளக்கி
பாளைகொண்டுபல்விளக்கி ஓலைகொண்டுநாவழித்து
தீர்த்தநீர்வாங்கி திருவாயுங்கொப்பளித்து
வசந்தநீர்வாங்கி மதிமுகஞ்சுத்திசெய்து
சிவசிவாவென்று திருநீற்றுக்காப்பணிந்து
அரகராவென்று அணிந்தாரேவெண்ணீற்றை
பாகைவிரித்துடுத்தி பட்டாடைமேல்போர்த்தி
முத்துமிதியடியைத் தொட்டுமிகநடந்து
வசந்தமணிமண்டபத்தில் மன்னரெழுந்தருள
அங்குஞ்சிலமன்னவர்கள் அவசரமாயோடிவந்து
இட்டார்சிங்காதனங்கள் எழிலானமன்னருக்கு
இட்டசிங்காதனத்தில் எழில்மன்னன்வீற்றிருந்து

### துரியோதனன் தோட்டக்காரரை அழைத்து மாங்கனி பறித்துவரச் சொன்னது

மாஞ்சோலைதோட்ட காவலரைத்தானழைத்தான்
மாஞ்சோலைதோட்டத்து மன்னவரும்ஓடிவந்து
சிங்காதனத்திற்கு முன்பாகத்தெண்டனிட்டு
என்னையழைத்தபணி யேதுபணிசொல்லுமென்றான்
தேசத்தையாளுந் துரியோதனன்கேட்டு
உன்னையழைத்தது ஒன்றுற்குறைவுமில்லை
மாங்கனிதோட்டத்தில் மன்னவரேபோய்புகுந்து
தினுசுக்கொருமாங்கனியை தீவிரமாய்நீர்பறித்து
வகைக்கொருமாங்கனியை மன்னவரேநீர்பார்த்து
கூடையில்மாங்கனியை கொற்றவரேநீரெடுத்து

கடுகெனவேவாருமென்று கட்டளையுமிட்டார்கள்
மாஞ்சோலைகாக்கின்ற மன்னவருந்தான்கேட்டு
அவர்-எட்டடியுமோரடியால் எட்டிமிக்நடந்து
மாங்கனிசோலையிலே மன்னவருமுட்புகுந்து
வகைக்கொருமாங்கனியை வகைவகையாய்தான்பறித்து
கூடையில்மாங்கனியை கொற்றவருந்தானிறப்பி
தூக்கிநடந்தார்காண் துரிதமுடனப்பொழுது
எடுத்து நடந்தாரே எழில்பெரியமன்னவரும்
தேசத்தழகன் துரியோதனன்முன்னேவந்து

துரியோதனனிடத்தில் தோட்டக்காரர் மாங்கனி
கொண்டுவந்து கொடுத்தது

கூடையில்மாங்கனியை கொற்றவர்க்குமுன்னேவைத்தா
தேசத்தையாளுந் துரியோதனன்பார்த்து [ர்
மாஞ்சோலைக்காவலரை மன்னவருந்தானழைத்து
மாங்கனிக்கூடைதனை மன்னவரே தூக்குமென்று
பள்ளியரைமண்டபத்தில் வந்தாரேயப்பொழுது
பேடைமயில்கண்ணாளின் உட்கட்டில்போய்புகுந்து
கட்டிலின்கீழாகக் கொட்டிப்பரப்புமென்றார்
தட்டுதட்டாய்மாங்கனியைக் கொட்டிப்பரப்பிவைத்தார்
இப்படியாகவே இவரிருக்கும்வேளையிலே

பொன்னுருவி மறுநாள் துரியோதனனிடத்தில்
மாங்கனிக்காக வருகிறது

பொழுதுவிடிந்தது பகவானும்வந்துதித்தார்
கங்குல்விடிந்தது கதிரோனும்வந்துதித்தார்
செங்கண்மால்கோவிலுக்கு திருக்காப்புச்சென்றது
போதேவருந்தடங்கண் பொன்னுருவிதானெழுந்து
மாது நல்லாள்பொன்னுருவி மசக்கைகுணமாகி
மாது நல்லாள்பொன்னுருவி மாங்காய்மனதாகி
மாமனார்மாளிகைக்கு வாராள்மயில்போலே
இப்படியாக இருக்கின்றவேளையிலே

பெருந்திருவாள் கருணரை அழைத்து பொன்னுருவியுடன்
பேசிவிக்கத் தந்திரஞ் சொன்னது

பேடைமயில்கண்ணாள் பெருந்திருவாள்தான்பார்த்து
காஞ்சிநாடாளுங் கருணரைத்தானழைத்தாள்

காஞ்சிநாடாளுங் கருணரும்ஓடிவந்து
மாதாவின்பாதம் மலர்தூவிதெண்டனிட்டான்
என்னையழைத்தபணி ஏதுபணிஎன்ருச்சி
பேடைமயில்கண்ணுள் பெருந்திருவாள்கூறுவாள்
மாது நல்லாள்பொன்னுருவி மாங்காய்மனதாகி
மாங்காய்மனதாகி வருவாள்மயிலணையும்
தட்டியெழுப்புவாள் தாமக்குழலாளும்
பள்ளிகொள்ளுமென்ருளே பங்கயஞ்சீர்கண்ணுளும்
காஞ்சிநாடாளுங் கருணரவர்கேட்டு
சந்தோஷப்பட்டார் சரீரங்கள்பூரித்தார்
உள்ளங்குளிர்ந்தார் உடம்பெல்லாம்பூரித்தார்

பெருந்திருவாள் கருணனை துரியோதனனைப்போல
சிங்காரித்து முக்காடிட்டு படுத்திருக்கச்
சொன்னது

அறுபத்துநான்குமுழம் அழகானபச்சைவடம்
முக்காடுபோட்டு முடிமன்னன்பள்ளிகொண்டான்
இப்படியாக யிருக்கின்றவேளையிலே
போதேவருந்தடங்கண் பொன்னுருவி நாயகமும்
மாமனூர்வாசலுக்கு வந்துநுழைந்தாளே
பேடைமயில்கண்ணுள் பெருந்திருவாள்தான்பார்த்து
போதேவருந்தடங்கண் பொன்னுருவி நாயகமே
வந்ததொருபயணமதை வாய்திறந்துகூறுமென்ருள்
போதேவருந்தடங்கண் பொன்னுருவி நாயகமே
மாங்காயுந்தாரோமென்று மன்னவர்வரச்சொன்னூர்
மாங்கனிக்காக வரச்சொன்னூர்காணெண்மாமா
மாமாவும்எங்கேஎன்ருள் மாலைக்கருங்குழலும்

பொன்னுருவி துரியோதனன் எங்கேயென்று
பெருந்திருவாளைக் கேட்டது

பேடைமயில்கண்ணுள் பெருந்திருவாள்கூறுவாள்
தலைநோவுகண்டுதென்று தாமமுடியானும்
முக்காடுபோட்டு முடிமன்னர்பள்ளிகொண்டார்
துப்பட்டிபோர்த்து துரைமன்னர்பள்ளிகொண்டார்
வந்தசெனங்களெல்லாம் வாசலிலேகாத்திருக்க
போசனங்களுண்ணவில்லை பொற்கொடியேயுன்மாமா
தட்டியெழுப்புமென்ருள் தாமக்கருங்குழலும்

பொன்னுருவி மாமனுரைத் தட்டி எழுப்பினது

அவள்-ஆகட்டுமென்றுசொல்லி அப்படியே நல்லதெ
மன்னவனுர் தன்னருகில் வந்தாளேமெல்லியரும் [ன்று
மாமா-ஆடல்அடிசல் ஆறியிருக்கிறது
பட்டணத்துவெள்ளானை பஞ்சாங்கங்கேட்கவில்லை
பஞ்சாங்கங்கேட்கவில்லை பாலமுதம்கேட்கவில்லை
மதிப்பேபெரிதுடைய மாமாயெழுந்திரென்ருள்
காஞ்சிநாடாளுங் கருணரவர்கேட்டு
குஞ்சிரிப்புக்கொண்டு குலுங்கநகைநகைத்தான்
போதேவருந்தடங்கண் பொன்னுருவிதான்பார்த்து
மாமி-உடம்புகுலுங்குது உத்தமரும்பேசவில்லை
மற்றுமொருதரம் தட்டிஎழுப்புமென்ருள்
மாமா-ஆடல்அடிசல் ஆறியிருக்கிறது
பட்டணத்துவெள்ளானை பஞ்சாங்கங்கேட்கவில்லை
பஞ்சாங்கங்கேட்கவில்லை பாலமுதமுண்ணவில்லை
நம்மொத்தராசாக்காள் பசியோடுகாத்திருக்க
சரியொத்தராசாக்கள் தானங்கேவீற்றிருக்க
துய்யர்குலத்தில் துரோணருங்காத்திருக்க
எல்லாருங்கார்த்திருக்க என்மாமாஎழுந்திரென்ருள்
தட்டிஎழுப்பினுள் தாமக்கருங்குழலும்
முக்காடுநீக்கி முடிமன்னர்தான்பார்த்தார்
துப்பட்டிநீக்கி துரைமன்னர்தான்பார்த்தார்

பொன்னுருவி கருணரைப்பார்த்து அந்தப்புறத்தில்
ஒளித்துக் கொண்டது

கருணர்திருமுகத்தைக் கண்டவுடன்பொன்னுருவி
திக்கென்றெழுந்திருந்து தேனேகருங்குழலும்
தேனேகருங்குழலும் திமிதிமின்ருேடலுற்ருர்
மஞ்சனீர்சாலையிலே மாதவள்போய்புகுந்தாள்
காஞ்சிநாடாளுங் கருணரெழுந்திருந்து
அவர்-கூடத்தொடர்ந்தாரே கொற்றவனுர்வீரியரும்
போதேவருந்தடங்கண் பொன்னுருவிமுன்னேவந்து
பார்த்தார்பலகாலும் பங்கயஞ்சீர்கண்ணுலே

பொன்னுருவி கருணரைப் பார்த்தோடும்போது
மூர்ச்சையாகி விழுந்தது

அவள்-கைகால்கள்சோர்ந்து களையாயிருப்பதை
கண்ணுலேகண்டாரே கட்டழகரப்போது

அவர்-உள்ளமும்பூரித்து உடம்பும்விடவிடத்து
மாங்காய்க்குத்தானுக மாண்டாளேபொன்னுருவி
மாங்காய்க்குத்தானுக செத்தாளேபொன்னுருவி
செத்தாடிபொன்னுருவி வாடிபெருந்திருவாள்
மாண்டாடிபொன்னுருவி வாடி நீதுற்சடையாள்
கூவியழைத்தாரே கொற்றம்பூராஜாவும்
அழைத்ததொருசத்தத்தை ஆச்சியருந்தான்கேட்டு
பேடைமயில்கண்ணுள் பெருந்திருவாள்தான்கேட்டு
அவள்-உள்ளமுருகி உடம்பும்விடவிடத்து
ஓட்டம்பெருநடையாய் ஓடிவந்துமுன்னே நின்ருள்
தோகைமயிலணையாள் துற்சடையாளோடிவந்து
இருவருங்கூடியே எதிராகவந்துநின்ருர்
பேடைமயில்கண்ணுள் பெருந்திருவாள்நாயகமும்
காஞ்சிநாடாளும் கருணருடன்எதுசொல்வாள்
நான்செய்தவேலையல்ல நன்மையுள்ளஎன்மகனே
தோகைமயிலணையாள் துற்சடையாள்செய்தவேலை
காஞ்சிநாடாளுங் கருணரவர்கேட்டு
தோகைமயிலணையே துற்சடைப்பூநாயகமே
மாங்காய்க்குத்தானுக மாண்டாளேபொன்னுருவி
மாங்காய்க்குத்தானுக செத்தாளேபொன்னுருவி
செத்தாளேபொன்னுருவி சேர்ந்திழவுகாணுமென்ருன்
மாண்டாளேபொன்னுருவி மாரிழவுகாணுமென்ருன்
தோகைமயிலணையாள் துற்சடையாள்தான்கேட்டு
செத்தாள்பிழைத்தாக்கால் எனக்கென்னதாராயோ [ரு
மாண்டாள்பிழைத்தாக்கால் எனக்கென்னதருவாயென்

கருணர் பொன்னுருவியை மடியி லெடுத்துக்கொண்டு
சந்தோஷமடைந்தது

வாரியெடுத்து வலதுதுடையில்வையும்
காஞ்சிநாடாளுங் கருணரவர்கேட்டு
வாரியெடுத்து வலதுதொடையில்வைத்தான்
கட்டியெடுத்து கருணர்தொடையில்வைத்து
கன்னியரைத்தான்பார்த்து கருணர்அழுகலுற்ருர்
அப்படியும்தானழுக அந்நேரவேளையிலே
கருணரிடைகாக்குங் கஸ்தூரிபொன்வாசனையாள்
மூர்ச்சைதெளிந்து எழுந்தாள்மூருகுழலாள்
கருணர்திருமுகமுங் கவசகுண்டலங்கண்டவுடன்

தேனுங்கருங்குழலும் திமிதிமென்றேடலுற்றள்
போதேவருந்தடங்கண் பொன்னுருவி நாயகமும்

பொன்னுருவி தன்னரண்மனை வந்துசேர்ந்தது

ஒட்டம் நடையுமாக ஒருநொடியிலோடிவந்து
ஆனந்தவாழ்மார்ப னரண்மனையினுட்புகுந்து
அன்ன நடைபொன்னுருவி அமுதவிடம்பள்ளிகொண்
மாது நல்லாள்பொன்னுருவி மசக்கைகுணமாகி [டாள்
மாது நல்லாள்பொன்னுருவி மாங்காய்மனதாகி
இப்படியாக இவளிருக்கும்வேளையிலே

கருண்ர் தோட்டக்காரரை அழைத்து
மாங்கனி பறித்துக்கொண்டுவரச் சொன்னது

காஞ்சி நாடாளும் கர்னர்பெருமாளும்
மாமரத்தோப்புதனில் மன்னவரும்போய்புகுந்து
மாங்கனிக்காவலரை மன்னவரைத்தானழைத்தார்
மாங்கனிக்காவலர்கள் மன்னவர்களோடிவந்தார்
என்னையழைத்தபணி ஏதுபணிசொல்லுமென்றூர்
உன்னையழைத்தது ஒன்றூற்குறைவுமில்லை
வகைக்கொருமாங்கனியை வரிசையாய்த்தான்பறித்து
தினுசுக்கொருகனியை தீவிரமாய் நீபறித்து
கோணியில்மாங்கனியைக் கொட்டியேமூட்டைகட்டி
போதேமருந்தடங்கண் பொன்னுருவி நாயகிக்கு
அவளுடையமாளிகைக்கு அனுப்பவேவேணுமென்று
மாங்கனிக்காவலர்கள் மன்னவர்கள்தான்கேட்டு [ர்
அவர்-ஆகட்டுமென்றுசொல்லி யட்சணமேதானடந்து
மாங்கனிச்சோலையிலே மன்னவருமுட்புகுந்து
கொம்பில்பழுத்திருக்கும் கோதுபடாமாங்கனியும்
கிளைகளின்ஓரத்தில் காய்த்திருக்கும்மாங்கனிகள்
வகைக்கொருமாங்கனியைவகைவகையாய்தான்பறித்தா
தினுசுக்கொருகனியைத் தீவிரமாய்த்தான்பறித்தார் [ர்
கோணியில்கொட்டியே கட்டினர்காவலரும்
தூக்கியெடுத்தார்கள் துரிதமுடன்போய் நடந்தார்
காஞ்சி நாடாளும் கர்ணரும்பின்துடர்ந்தார்
மாந்தோப்பைவிட்டு மன்னவர்கள்வாறூர்கள்
தெற்குத்தெருதாண்டி தேரோடும்வீதிவிட்டு
மாடோடும்வீதிவிட்டு மன்னவர்கள்வாறூர்கள்

போதேவருந்தடங்கண் பொன்னுருவிமாளிவந்தார்
காஞ்சிநாடாளும் கர்ணர்பெருமாளும்
மாணிக்கத்தூணருகே மறைவாகத்தானிருந்தார்
இப்படியாக இவரிருக்கும்வேளையிலே

காவலர்கள் பொன்னுருவிக்கு மாங்கனி
கொண்டுவந்து கொடுத்தது

போதேவருந்தடங்கண் பொன்னுருவி நாயகிமுன்
கொண்டுவந்துகொட்டினர்கள் கொற்றவரும்மாங்கனி
போதேவருந்தடங்கண்பொன்னுருவிதான்பார்த்து[யை
விழியாதகண்கள்ரெண்டும் விழித்துமேதான்பார்த்து
திறவாதகண்கள்ரெண்டும் திறந்துமவள்பார்த்து
இதுயேதுமாங்கனிகள் எனக்கறியசொல்லுமென்றாள்
ஆர்தந்தார்மாங்கனிகள் அறியவுரையுமென்றாள்

காவலர்கள் பொன்னுருவிக்கு கர்ணர்கொடுத்த
மாங்கனியென்று சொன்னது

அப்போதுதூதவர்கள் அடிவணங்கிச்சொல்லுகிறார்
காஞ்சிநாடாளும் கருணரவர்கொடுத்தார்
இந்தாருமென்றுசொல்லி எடுத்துக்கொடுத்தார்கள்
போதேவருந்தடங்கண் பொன்னுருவிதான்கேட்டு
கண்கள்சிவந்து கனலண்டிப்பொறிபறக்க
நீலவிழிக்கண்கள் நெருப்புத்தணலாக
பற்றிய நாகம் பவளம் பால்கண்சிவந்து
இழிகுலத்தான்மாங்காயைத் தீண்டேனிருகையால்
சாதிகெட்டான்மாங்காயைகண்ணாலேபார்ப்பதுண்டோ
என்று-வீசியடித்தாளே வேல்பொருதுங்கண்ணாளும்
எடுத்துமெறித்தாளே இருகையால்மாங்கனியை
பார்த்துமவள்பற்கடித்தாள் பைங்கிளியாளப்பொழுது
எடுத்துநடவுமென்றாள் ஏலக்கருங்குழலும்
இப்படியாக இருக்கின்றவேளையிலே

பொன்னுருவி கர்ணன்கொடுத்த மாங்கனி வேண்டா
மென்று காவலர் வசம் அனுப்பிவிட்டது

அப்போ-காஞ்சிநாடாளும் கருணரவர்பார்த்து
கதித்துகனலண்டி கண்கள்பொரிபறக்க
நீலவிழிக்கண்கள் நெருப்புத்தணலாகி
நெற்றிப்புருவம் நெருப்பாயனல்பறந்து

பற்றிய நாகம் பவளம்போல்கண்சிவந்து
குன்றுபோல்கண்சிவந்து கோபமதிகமதாய்
மதுரைகொள்ளத்திருமாது மாளிகையின்வாயலுள்ளே
கட்டிவரும்பாற்குடங்கள் காவலர்கள்வாசலிலே
இத்தனையுங்கண்டிருந்தாள் ஏலக்கருங்குழலும்
அனுப்பினமாங்கனியை ஆரணங்குவேண்டாமென்று
மன்னவரைத்தானழைத்துமாங்கனியைத்தூக்குமென்ரு
அப்போது தூதவர்கள் அவசரமாய்த்தானெழுந்து [ள்
மாங்கனியைத்தானெடுத்து மன்னர் நடக்கலுற்ருர்
தங்கள்தங்கள்மாளிகையில் தானடர்ந்தார் தூதுவர்கள்
இப்படியாக இவரிருக்கும்வேளையிலே

பொன்னுருவி தாதியையழைத்து மறுஊருக்குப்போய்
மாங்கனி கொண்டுவரச் சொன்னது

போதேவருந்தடங்கண் பொன்னுருவி நாயகமும்
மாதுநல்லாள்பொன்னுருவி மசக்கைகுணமாகி
மாதுநல்லாள்பொன்னுருவி மாங்காய்மனதாகி
தாய்போல்வளர்த்தெடுத்த தாதியரைத்தானழைத்து
மாங்காயளவெடுத்து மாங்கனிபோல்பொன்னெடுத்து
பொன்னையெடுத்து புறப்படத்தானிருந்தாள்
அப்போது-இவ்வூரைவிட்டு மறுவூறுபோமென்ருள்
தாமக்கருங்குழலாள் தாதியவள்கேட்டு
எலுமிச்சம்பூப்பட்டு இழித்துவரிந்துடுத்தி
பஞ்சவர்ணப்பூப்பட்டுப் பாங்கிவரிந்துகட்டி
நாமத்துளிர்பட்டெடுத்து நன்ருய்வரிந்துடுத்தி
பொன்னெடுத்துக்கைபிடித்து புறப்பட்டாள்தாதியவள்
போருளவள்தாதி பொன்னுபரணமின்ன
பொற்பிரப்பங்கோல்பிடித்துப் போருளவள்தாதி
தெற்குத்தெருதாண்டி தோரோடும்வீதிவிட்டு
மாடோடும்வீதிவிட்டு மங்கையவள்போகலுற்ருள்
அவ்வூரைவிட்டு மறுவூரைப்போய்நடந்தாள்
அந்தந்தஊர்களெல்லாம் அலைந்தாளேமாங்கனிக்கு
தேசங்களுள்ளதெல்லாம் திரிந்தாளேமாங்கனிக்கு
எங்கெங்கேசுத்தினலும் இளமாங்காய்கிட்டவில்லை
தேசங்கள்சுத்தினலும் சிறுமாங்காய்க்காணவில்லை
மாந்தோப்புச்சோலையெல்லாம் மாமரமாயிருக்கும்

காச்சதொருமாங்காய்க் காணக்கிடையாது
மாங்காய்கிடையாதே மாலேக்கருங்குழலும்
மாங்கனிக்குதான்கொடுத்த மலர்பொன்னேத்தானெடுத்
பொன்னேமடியில்வைத்துப்புறப்பட்டாள்தாதியரும்[து
எட்டடியும்ஓரடியாய் எட்டிமிகநடந்து
பத்தடியும்ஓரடியாய் பதறியவள் நடந்து
பொன்னுருவிமாளிகைக்குப் புறப்பட்டுத்தானேவாராள்
போதேவருந்தடங்கண் பொன்னுருவி நாயகியும்
வாசர்படிபிடித்து மாதரந்தபொன்னுருவி
மாங்காய்வருகுதென்று வழிபார்த்துக்கொண்டிருந்தாள்
இப்படியாக இவளிருக்கும்வேளேயிலே

**பொன்னுருவி அனுப்பின தாதிவந்து எங்கும்**
**மாங்காய் அகப்படவில்லே என்று சொன்னது**

தாய்போல்வளர்த்தெடுத்த தாதியவளோடிவந்தாள்
போதேவருந்தடங்கண் பொன்னுவி நாயகமே
மாங்காய்க்குப்பட்டகளே போதுமென்ருள்தாதியவள்
தேசம்பதினும் திரிந்துவந்தேன் மாங்கனிக்கு
வையகமெல்லாஞ் சுற்றிவந்தேன்மாங்கனிக்கு
எங்கெங்குந்தேடி யினியவிடமாராய்ந்தேன்
மாங்காய்மரமிருக்கும் மாங்காயைக்கண்டதில்லே
தழைந்தமரமிருக்கும் சிறுபிஞ்சுகண்டதில்லே
எந்தனுக்கும்கிட்டாது ஏலக்கருங்குழலே
என்றுமவளுரைத்து இந்தாரும்பான்னென்று
கையில்கொடுத்தாளே கட்டழகிதாதியரும்
பொற்கொடியும்வாங்கி பெட்டியுள்வைத்துக்கொண்டா
போதேவருந்தடங்கண் பொன்னுருவி நாயகிக்கு [ள்
அந்த-மாதரிளங்கொடிக்கு மசக்கைக்குணமாகி
மாதரிளங்கொடிக்கு மாங்காய்மனதாகி
மாருட்டங்கொண்டு மௌனமாய்த்தானிருப்பாள்
அன்னபானுதி அருந்தாளேஆரணங்கு
உப்பஞ்சிர்வேண்டாள் உரியில்தயிர்வேண்டாள்
காளாஞ்சிதீண்டாள் கமலம்பூநாயகியும்
முந்தாணிபோட்டு முருகுழலாள்பள்ளிகொள்வாள்
கண்டவிடந்தனிலே காரிழையுப்பள்ளிகொள்வாள்
இப்படியாக இவளிருக்கும்வேளேயிலே

## பொன்னுருவி இரண்டாவது ஒரு தாதியை மாங்கனிக்கு அனுப்பினது

ஆரணங்குமாதருக்கு ஆயிரம்பேர்தாதியுண்டு
ஆயிரம்பேர்தாதிகளில் அதிலேயொருத்தியவள்
அப்போதுதாதியவள் அன்பாகஎங்கேவாருள்
மாஞ்சோலைதேடியவள் மகிழ்வுடனேவாருளே
எங்கேதான்வாருளவள் எழிலானதாதியவள்
தெற்குத்தெருதாண்டி தேரோடும்வீதிவிட்டு
மாஞ்சோலைக்கருகாக மகிழ்ச்சியுடன்தான்வந்து
கர்ணருடமாஞ்சோலைக்குள் கட்டழகிபோகலுற்ருள்
கர்ணருடமாஞ்சோலை காத்திருக்கும்மன்னர்களில்
அப்பெரியசோலைகாக்கும் ஆயிரம்பேர்மன்னர்களை
ஆயிரம்காவலர்க்கும் அதிகாரிதானெருவன்
அதிகாரியானவற்கும் ஆரணங்குதாதியற்கும்
மெத்தப்பழக்கமுண்டு வேல்பொருதும்கண்ணுட்கு
ஆனவுறவுமுண்டு அடிநாள்தொடுசுமுண்டு
அந்தவுறவாலே ஆரணங்குதாதியவள்
மாஞ்சோலையுட்புகுந்து மன்னவனைத்தேடிவந்தாள்
தழைத்தமரத்தடியில் தான்பள்ளிகொண்டிருந்தான்
ஆரணங்குதாதியரும் அதிகாரிபின்னேவந்து
உற்றவுறவுகளும் வுறன்முறைக்காரியமும்
மற்றவிசேஷமெல்லாம் மாதவளுந்தான்பேசி [ள்
அதிகாரன்பின்னேவந்து தலைபார்த்துகொண்டிருந்தா
தலைபார்க்கும்பாவனைபோல் தாதியவளேதுசொல்வாள்
மன்னன்முகம்நோக்கி மாதுஎடுத்துரைப்பாள்
போதேவருந்தடங்கண் பொன்னுவிநாயகிக்கு
மாதரிளங்கொடிக்கு மசக்கையதிகரித்து
தொண்ணூறுநாளா அன்னமதுவுண்ணவில்லை
படுக்கைபொருந்தவில்லை பாவையிளங்கொடிக்கு
மாங்காய்நினைவானுள் மாதரிளக்கொடியும்
உந்தனதுசோலையிலே ஒருமாங்காய்வேண்டுமென்ருள்
அந்தவுரைகேட்டு ஆணழகன்ஏதுசொல்வான்
ஏதோடிதாதிஎன்று யேறமுகம்பார்த்து
கன்னிமுகம்நோக்கிக் காவலனுமேதுசொல்வான்
மெள்ளமெள்ளவந்தாயோ கொள்ளையிடமாங்கனியை
மாங்காஎன்றுரைத்தசொல்லை மன்னவர்தாம்கேட்டார்ல்

வாயைக்கிழித்திடுவார் மண்டையுடைத்திடுவார்
எழுந்து நடவுமென்று எகிரித்துறத்தலுற்ருள்
இந்தச்சொல்சொன்னமட்டும் இனியிருக்கலாகாது

நாதி கர்ணருடைய தோட்டத்தில் ஒரு மாங்காய்
திருடிவந்து பொன்னுருவிக்குக் கொடுத்தது

அப்போதுதாதியவள் ஆரணங்கு நாயகியாள்
ஓடிவரும்வேகத்திலே ஒருமாங்காய்தான்பறித்தாள்
ஒருமாங்காய்தான்பறித்து உள்மடியில்தான்சொருகி
மாங்கனிச்சோலையைத் தாண்டிஞள்மங்கையரும்
போதேவருந்தடங்கண் பொன்னுருவிமாளிசென்ருள்
கைகால்கள்சுத்திசெய்து கட்டழகிவுட்புகுந்து
மாங்காய்கறிசமைக்க மாது நல்லாளேதுசொல்வாள்
மாலைக்குழலாளும் மாங்காய்தனைத்திருகி
உப்புக்கொருகீத்துக் கலந்துபிசறிவைத்தாள்
கடுக்கொருகீத்துக் கலந்துபிசறிவைத்தாள்
மாங்காய்க்குவெந்தயங்கள் மயிலணையும்செப்பனிட்டா [ள்
பத்துவிதப்பச்சடியும் பதமாய்த்திருத்திஞள்
குழம்புபொறிக்கறியும் கூட்டமுதுதான்சமைத்தாள்
தயிர்சேர்ந்தபச்சடியும் தாளித்தாள்தையலரும்
புளிசேர்ந்தபச்சடியும் செய்தாளேபொற்கொடியும்
அவியல்துவையலது அவிழ்த்தாளே ஆரணங்கு
தித்திப்புமாங்கனிக திகட்டும்படிசெய்து
போதேவருந்தடங்கண் பொன்னுருவிமுன்னேவந்து
மாங்காய்கள்வந்துதம்மா மாதரிளங்கொடியே
போசனங்களுண்ணப் பொற்கொடியேவாருமென்ருள்

தாதிகள் பொன்னுருவிக்குப் போசனம்
சமைத்துப் போட்டது

அந்தவுரைகேட்டு ஆரணங்குபொன்னுருவி
திட்டென்றெழுந்திருந்து சேயிழையுமப்போது
மஞ்சநீர்சாலையிலே மயிலணையும்வந்துநின்று
காலோடுகையும் கனிவாயும்சுத்திசெய்து
மார்போடுதோளுட மதிமுகஞ்சுத்திபண்ணி
சிவசிவாவென்று திருநீற்றுக்காப்புமிட்டு
பத்திரம்போட்டு பகவானைக்கைதொழுது

தும்பைமலர்போட்டுச் சூரியனைப்பூசைபண்ணி
சுத்திவளையவந்து செவிதனிலேபூச்சொருகி
அம்மாதுபொன்னுருவி யரண்மனையில்சென்ருர்காண்
அங்குமொருதாதி அறிவுடையாளோடிவந்து
வட்டமணைபோட்டு வண்மையுடன்குந்தவைத்து
வாழையிலைபோட்டு மணிச்சொம்புநீர்தெளித்து
தும்பைமலர்போல சொரிந்தாளேபோசனங்கள்
ஆயிரத்தெட்டுவிதம் சமைத்திருந்தமாங்கனியை
விதவிதமாய்த்தானெடுத்து வட்டித்தாள்மெல்லியற்கு
போதேவருந்தடங்கண் பொன்னுருவி நாயகியாள்
பூரித்திருதோளும் பொன்னுபரணமின்ன
சந்தோஷப்பட்டு சரீரங்கள்பூரித்து
தொண்ணூறு நாள்களுண்ணுதபோசனத்தை
மாங்காயைத்தான்பார்த்து வாரியமுதுகொண்டாள்
வாரியமுதுகொண்டு வண்ணமுகஞ்சுத்திபண்ணி
கால்கைகள்சுத்திபண்ணி கனிவாயும்கொப்பளித்து
உடைகொண்டுவாய்துடைத்தே உத்தமிபோய்நடந்தா
கட்டிலின்மேற்படுத்து களையாறுள்கட்டழகி [ள்
தன்னைமறந்தாளே தாமக்கருங்குழலாள்
நினைவுயறந்துமல்லோ நித்திரைசெய்யலுற்ருள்
இப்படியாக யிவளிருக்கும்வேளையிலே

கர்ணர் பொன்னுருவிக்கு மாங்கனி கிடைத்ததோ
இல்லையோவென்கிற சந்தேகந் தெளியும்படி
அவளுடைய மாளிகையில்வந்து
மறைந்திருந்து பார்க்கிறது

காஞ்சிநாடாளும் கர்ணசிகாமணியும்
மாங்கனிதன்களவைக் காணவென்றுமன்னவனும்
போதேவருந்தடங்கண் பொன்னுருவிமாளிசென்று
பள்ளியறைமண்டபத்தைச் சுற்றியேபார்க்கலுற்ருன்
அந்தச்சமயத்தில் ஆரணங்குமாதவளும்
உண்ணுதமாங்கனியைத் தின்னபடியாலே
காணுதமாங்கனியைக் கண்டபடியாலே
குடலைப்பிரட்டி எடுத்தாளேவாந்தியவள்
அவளெடுத்தவாந்தி அன்பானமாங்கனியை
காஞ்சிநாடாளும் கருணரவர்பார்த்து

துன்னீலங்கண்ணாளும் துப்பட்டி தானேந்தி
வாயிலெடுத்ததெல்லாம் வாங்கினன் தன்கையிலே
வாங்கி நடந்தானே மகாராசன் மாளிகைக்கு
பேடைமயில்கண்ணாள் பெருந்திருவாள் முன்னேவந்து
ஆரணங்குஆச்சியரே அண்ணனுடதேவியரே

கர்ணர் பெருந்திருவாளைக்கண்டு பொன்னுருவிக்கு
மாங்காய் கொடுத்தவர் ஆரென்று கேட்டது

மாதரிளங்கொடிக்கு மாங்காய்கொடுத்தவரார்
ஆர்கொடுத்தார்மாங்கனிகள் ஆச்சியரே நீயுரையும்
கொடுத்தவரைக்கண்டாலே கொல்லத்துணிந்திடுவேன்
ஊருக்குமேற்கே உயிர்க்கழுவில்போட்டிடுவேன்
தாமமணிக்கட்டித் தறித்திடுவேன்பூமுடியை
அந்தவுரைகேட்டு ஆரணங்கும்எதுசொல்வாள்

பெருந்திருவாள் நான்கொடுக்கவில்லை யென்று
கர்ணருக்குச் சொல்வது

தேசத்தையாளும் துரியோதனப்பெருமாள்
அன்றொருநாள்வேளையிலே அழைத்தந்தக்காவலரை
மாங்காயைக்கண்டு வரச்சொல்லிமன்னவரும்
கட்டிலின்கீழாகக் கொட்டினார்மாங்கனியை
மாங்கனிக்காகவல்லோ மாதரிளங்கொடியாள்
அவரென்றுஉன்னை எழுப்பினளாரணங்கு
உந்தன்முகங்கண்டவுடன் ஓடியவள்பதுங்க
மஞ்சநீர்சாலையிலே மாதவளுஞ்சோர்ந்துவிட்டாள்
அன்றுமுதலின்றொருநாள் ஆரணங்குமாதருக்கு
மாங்காய்கள் கொடுத்தறியேன் மாதரிளங்கொடிக்கு
கொடுத்ததேயுண்டானல் கொல்லத்துணிந்துவிடும்
தாமமணிக்கட்டி தறித்துவிடும்பூமுடியை
என்றுமவளுரைத்து இருந்தாளேபெருந்திருவாள்
காஞ்சிநாடாளுங் கர்ணரவர்கேட்டு
மாங்கனிசோலையிலே வந்தார்கருணரும்

கர்ணர் தோட்டக்காரரை அழைத்து பொன்னுருவிக்கு
மாங்கனி கொடுத்தவராரென்று கேட்டது

மாங்கனிக்காவலரை மன்னவனும்தானழைத்தார்
ஆயிரம்பேர்காவலர்கள் அன்பாகஓடிவந்தார்

கர்ணரடிவணங்கிக் கட்டழகர் நிற்கலுற்ருர்
என்னையழைத்தபணி யேதுபணிசொல்லுமென்ருர்
கர்ணரதுகேட்டுக் காவலருக்கேதுசொல்வார்
ஆயிரங்காவலரே ஆணழகா நீங்களெல்லாம்
இப்பெரியசோலையிலே யிருந்தீர்களெல்லவரும்
மாஞ்சோலைக்காவல் இருந்தீர்கள்மன்னர்களே
போதேவருந்தடங்கண் பொன்னுருவி நாயகிக்கு
ஆர்கொடுத்தீர்மாங்கா யறியவுரையுமென்ருர்
எவர்கொடுத்தீர்மாங்கா யெனக்கறியச்சொல்லுமென்ருர்

பொன்னுருவியின்தாதி எங்களைக்காணுமல் மாங்காய்ப்
பறித்திருக்க வேணுமென்று காவலர்கள் சொன்னது

என்றவுரைகேட்டு ஏதுசொல்வார்காவலர்கள்
ஐயாவேகேளும் அடியேனொருவார்த்தை
என்னையா நீர்கேளும் எங்களுடவார்த்தை
ஆயிரம்பேர்காவலர்க்கு அதிகாரியானவனும்
மாமரத்தின்கிழாக மன்னவனும்பள்ளிகொண்டான்
போதேவருந்தடங்கண் பொன்னுருவிதாதியவள்
மாதரிளங்கொடியாள் மயில்போல்நடந்துவந்து
தாமமுடியார்க்குத் தலைபார்த்துக்கொண்டிருந்தாள்
இருவரும்பேசியல்லோ இனியசண்டைபண்ணுர்கள்
ஒருவருக்கொருவ ருகந்துசண்டைபண்ணுர்கள்
சண்டைபண்ணும்வேளையிலே நடந்தாளேதாதியரும்
அதிகாரிதானெழுந்து அடித்துத்துரத்தலுற்ருர்
உற்றபெரும்சோலையிலே ஓடினுள்தாதியரும்
ஓடினஓட்டித்திலே ஒருமாங்காய்கிள்ளினளோ
கிள்ளிப்பறித்தாளோ கிளிமூக்குமாங்காயை
ஒடிப்பறித்தாளோ வுத்தமியாள்தாதியரும்
தாமக்கருங்குழலாள் தாவிப்பறித்தாளோ
ஏதுமறியோமையா யென்றுசொன்னுர்காவலர்கள்

கர்ணர் பொன்னுருவி வீதியில் காவலரில்
ஒருவரைக் கட்டியடித்தது

காஞ்சிநாடாளும் கருணரதுகேட்டு
உத்தமனுர்காவலற்கு வுள்மர்மந்தானுரைத்து
போதேவருந்தடங்கண் பொன்னுருவிவீதியிலே
கட்டுங்கயிறெடுத்துக் காவலரேவாருமென்ருன்

அடிக்குங்கயிறெடுத் து வாருமென் ருனழகன்
அந்தவுரைகேட்டு அழகானகாவலர்கள்
கட்டும்கயிறுகளும் கையிற்பிரம்புடனே
பிடித்துமக்காவலனைப் பின்கட்டாய்க்கட்டியவர்
கொண்டுவாரார்வீதிவழி கொற்றவர்கள்தான்பார்க்க
போதேவருந்தடங்கண் பொன் னுருவிவீதிவந்து
துன்னீலங்கண்ணுர்கள் தொழுமரத்தில்கட்டிஞர்கள்
மற்றுமுள்ளகாவலரை மர்மமாய்க்கண்காட்டி
கர்ணரவர்கண்காட்ட கண்டந்தக்காவலரும்
கையில்பிரம்பெடுத்துக் காவலர்களேதுசெய்தார்
வீசியடிக்கலுற்ருர் மேலானகாவலரை
ஆவிதுடிதுடிக்கத் தாவியடிக்கலுற்ருர்
எட்டி மயிர்பிடித்து கட்டியடிக்கலுற்ருர்
அடிபட்டமன்னவனும் அலறியேகூவலுற்ருன்
குய்யோமுறையோவென்று கூச்சலிட்டுக்கூவினுன்
அடிபொருக்கமாட்டாமல் அலறுகிருன்காவலனும்
இப்படியாக இருக்கின்றவேளையிலே

மாங்காய் கொடுத்த காவலரை கர்ணர் அடிப்பதா அதை
நிறுத்த தாதி பொன்னுருவியிடத்தில் சொன்னது

போதேவருந்தடங்கண் பொன் னுருவிதாதியரும்
மாங்காய்திருடிவந்த மாலைக்கருங்குழலும்
போதேவருந்தடங்கன் பொன் னுருவிமுன்னேவந்து
மாங்காய்கொடுத்ததொரு மன்னவனும்மாளுகிருன்
கர்ணருடகையாலே கைமோசம்சேருகிருன்
மாங்காய்க்குத்தன்னுலே மாளவோமன்னவனும்
மாங்கனிக்குத்தன்னுலே சாகவோமன்னவனும்
காஞ்சிநாடாளும் கர்ணர்பெருமாளுக்கு
முத்தானவாய்திறந்து விஸ்தாரம்சொன்னுலே
காஞ்சிநாடாளும் கர்ணர்மனம்பொறுத்து
அடியைவிலக்குவார் ஆனந்தவாழ்மாரி
என்றுமவளுரைக்க ஏதுசொல்வாள்பொன் னுருவி

பொன்னுருவி தன்னிடத்தில்வந்து சொல்லிக்கொண்ட
தாதியின் இஷ்டப்படி மனவருத்தத்துடன்
சொல்லி அனுப்புகிறது

தாதிமுகம்நோக்கித் தார்குழலாளேதுசொல்வாள்
பிள்ளைபெறவேணுமென்று பெரியதவஞ்செய்தேனே

மைந்தன்பெறவேணுமென்று மாதவங்கள்செய்தேனே
போதுமடியெந்தனுக்கு புத்திரனுய்வந்தகொள்ளை
என்றுமனஞ்சலித்து ஏதுசொல்வாள்பொன்னுருவி
தாமக்கருங்குழலே தாதியரே நீகேளும்
காஞ்சிநாடாளும் கர்ணருகிற்சென்று
மாங்காயளவெடுத்து மாங்கனிபோல்பொன்னெடுத்து
கர்ணருடகைதலத்தில் கட்டழகி நீகொடுத்து
காஞ்சிநாடாளும் கர்ணருக்குத்தெண்டனிட்டு
போதேவருந்தடங்கண் பொன்னுருவி நாயகியாள்
அடிவிலக்கச்சொன்னளென்று அவருக்குரையுமென்ரு
நானுரைத்தபாவனையாய் நீயுரைத்துவாருமென்ருள்[ள்
அவ்வார்த்தைதான்கேட்டு ஆரணங்குதாதியரும்

தாதி பொன்னுருவி கொடுத்த பொன்மாங்கனி கர்ண
ரிடத்திற் கொண்டுபோய்க் கொடுத்து அடியை
நிறுத்தச் சொன்னது

போருளவள்தாதி பொன்னுபரண்மின்ன
பொற்பிரப்பங்கோல்பிடித்து போருளவள்தாதி
காஞ்சிநாடாளும் கர்ணருக்குமுன்னேவந்து
முக்கால்வலம்வந்து முடிவணங்கித்தெட்டனிட்டாள்
நாற்கால்வலம்வந்து நமஸ்கரித்துத்தெண்டனிட்டள்
ஐங்கால்வலம்வந்து அடிவணங்கித்தெண்டனிட்டாள்
காஞ்சிநாடாளும் கர்ணரவர்பார்த்து
அடி நிறுத்துமென்றுசொல்ல ஆணழகரேதுசொல்வார்
நீ-ஆர்பெண்ணேதாதி அறியவுரையுமென்ருர்
அப்போதுதாதி ஆரணங்குயேதுசொல்வாள்
ஆர்பணியுமல்ல அடியேன் திருப்பணிதான்
எவர்பணியுமல்ல எம்பெருமான் திருப்பணிதான்
பொன்னுருவி நாயகியாள் பூவையுடதாதியென்ருள்
போதேவருந்தடங்கண் பொன்னுருவிதாதியென்ருள்
காஞ்சிநாடாளும் கர்ணரவர்கேட்டு
நீ-இங்குவந்தகாரணத்தை எனக்கறியக்கூறுமென்ருர்
அப்போதுதாதி ஆரணங்குயேதுசொல்வாள்
மாங்காயளவாக கொடுத்ததொருபொன்னெடுத்து
கர்ணருக்குமுன்னேவைத்து கட்டழகியேதுசொல்வாள்
அடியைவிலக்குமென்று ஆரணங்குதெண்டனிட்டாள்

அந்தவுரைகேட்டு ஆணழகரேதுசொல்வார்
எங்களரண்மனையி லிருந்ததொருபொன்னையெல்லாம்
திருடி வந்துபொன்னுருவி தான்கொடுத்தாளெந்தனுக்
எங்களுடைமையது எந்தன்கையில்சேர்ந்ததுகாண் [கு

கர்ணர் பொன்னுருவி தாதிகொண்டுவந்த பொன்
மாங்கனியைப் பறித்துக்கொண்டு மறுபடியுங்
காவலனை அடிக்கச்சொன்னது

இன்னங்-கட்டியடியுமென்ருன் காவலனுர்வீரியரும்
கர்ணருரைகேட்டுக் காவலர்களப்போது
வீசியடிக்கலுற்ருர் வேல்பொருதுங்கண்ணனை
எட்டிமயிர்பிடித்து கட்டியடித்தார்கள்
முத்தந்தவாழ்மார்பர் மோதியடிக்கலுற்ருர்
அடிபொறுக்கமாட்டாமல் அலறுகிருன்காவலனும்
ஆவிதுடிதுடிக்க அடிக்கலுற்ருர்வீரியரும்
அழுதகுரலானுல் அல்லோகம்கேட்டுதங்கே
கூவுகிறகூச்சலென்ருல் கொற்றவற்குக்காதடைக்கும்

கர்ணர் பொன்மாங்கனியைப் பறித்துக்கொண்டு காவலனை
அடிப்பதில் தயையின்றி தன்னைத்துரத்தியதை
தாதி பொன்னுருவியிடம் வந்து சொன்னது

அப்பெரியக்கூச்சல்கேட்டு ஆரணங்குதாதியரும்
மனதுபொறுக்காமல் வாருளேதாதியரும்
ஆங்காரந்தன்னுடனே ஆணழகிவாருளே
போதேவருந்தடங்கண் பொன்னுருவிமுன்னேவந்து
ஆங்காரந்தன்னுடனே அடிவணங்கிதெண்டனிட்டா
தெண்டனிட்டதாதி திரும்பஎழுந்திருந்து [ள்
மோதிரமின்ன முடிமேலேகைதொழுதாள்
போதேவருத்தடங்கண் பொன்னுருவிஏதுசொல்வாள்
போனதொருகாரியங்கள் புதுமைகளைசொல்லுமென்ரு
அப்போதுதாதியவள் ஆரணங்குஏதுசொல்வாள் [ள்
மாங்காயளவாக நீகொடுத்தபொன்னெடுத்து
கர்ணருக்குமுன்னேவைத்து காலில்விழுந்தேனே
அடியைவிலக்குமென்று அடிவணங்கிதெண்டனிட்டே
காஞ்சிநாடாளும் கர்ணரவர்பார்த்து [ன்
எங்களுடமையது எனக்குவந்துசேர்ந்ததென்று

இன்னம்-கட்டியடியுமென்றார் காவலனார்வீரியனை
பார்த்துவயிறெரிந்து பதறிநடந்துவந்தேன்
கண்டுவயிறெரிந்து காணவந்தேன்உந்தனிடங்
என்னவுபாயமது ஏதுசெய்வோமாச்சிஎன்றாள்

மறுபடியும் கர்ணர் காவலரை அடிப்பதில் அதை நிறுத்த
பொன்னுருவி தன் ஆபரணமுதல் எது வேண்டினாலுந்
தருகிறேனென்று தாதியுடன் சொல்லி
அனுப்பினது

போதேவருந்தடங்கண் பொன்னுருவிதான்கேட்டு
தாதிமுகம்நோக்கித் தையலருமேதுசொல்வாள்
காஞ்சிநாடாளும் கர்ணருகிற்சென்று
ஏதேதுகேட்டாலும் இளங்கொடியாள்தாரேனென்றாள்
அடியைவிலக்கச்சொல்லி ஆரணங்குகேளுமென்றாள்
அவர்-என்னுடமைகேட்டாலும் ஏதேதுகேட்டாலும்
எந்தனுடமையது அடங்கலும்கேட்டாலும்
அத்தனையும்தாரேனென்று அவருக்குத்தெண்டனிட்டு
அடியைவிலக்கிவாரும் ஆரணங்குதாதியென்றாள்
அந்தவுரைகேட்டு ஆரணங்குதாதியவள்
வாராளவள்தாதி வளம்பெரியவீதியிலே
காஞ்சிநாடாளும் கர்ணரெதிரேவந்து
முக்கால்வலம்வந்து முடிவணங்கிதெண்டனிட்டாள்
நாற்கால்வலம்வந்து நமஸ்கரித்துதெண்டனிட்டாள்
தெண்டனிட்டதாதி திரும்பஎழுந்திருந்து
மோதிரமின்ன முடிமேலேகைதொழுதாள்
காஞ்சிநாடாளும் கர்ணரவர்பார்த்து
அடியைநிறுத்துமென்று ஆணழகரேதுரைப்பார்
நீ-யாருடையதாதி அறியவுரையுமென்றார்
எவருடையதாதி எனக்கறியக்கூறுமென்றார்
அப்போதுதாதி அடிவணங்கிஏதுசொல்வாள்
ஆர்பணியுமல்ல அடியேன்திருப்பணிதான்
பேர்பணியுமல்ல பெருமாள்திருப்பணிதான்
பொன்னுருவிதாதியென பொன்னடிக்குத்தெண்டனிட
காஞ்சிநாடாளும் கர்ணரெடுத்துரைப்பார்
இங்கேநீவந்தவகை எனக்கறியக்கூறுமென்றான்
கட்டழகிதாதியவள் கர்ணருக்குஏதுசொல்வாள்

போதேவருந்தடங்கண் பொன்னுருவி நாயகியாள்
உங்களுக்குச்சொல்லுமென்று உத்திரவுசொன்னளே
பொன்னுபரணமெல்லா பொற்கொடியாள் தான்கழற்றி
இந்தவுடமைஎல்லாம் இளங்கொடியாள் தான்கழற்றி
அத்தனையும்உங்களுக்கு ஆரணங்குதாரேனென்ருள்
அடியைவிலக்குமென்ருள் ஆரணங்குபொன்னுருவி
அந்தவுரைகேட்டு ஆணலழகுமன்னன்

கர்ணர் பொன்னுருவி ஆபரணமெல்லாங் கொண்டுவந்து
கொடுத்தால் அடியை நிறுத்துகிறேனென்று
தாதிக்குச் சொன்னது

போதேவருந்தடங்கண் பொன்னுருவி நாயகியாள்
அவளுடமை அத்தனையும் ஆரணங்கேவாங்கிவந்தால்
அடியைவிலக்கிடுவேன் ஆரணங்கேஎன்றுரைத்தார்
அந்தஉரைகேட்டு ஆரணங்குதாதியரும்
ஓட்டம்பெருநடையாய் ஓடிவந்தாள் தாதியரும்
போதேவருந்தடங்கண் பொன்னுருவிமாளிசென்ருள்
கர்ணனுடதேவியவள் கட்டழகிமாதருக்கு
தாய்போல்வளர்த்தெடுத்த தாதிவந்துதெண்டனிட்டா
போதேவருந்தடங்கண் பொன்னுருவி நாயகியாள் [ள்
தாதிமுகம்நோக்கி தையலருமேதுசொல்வாள்
போனதொருகாரியங்கள் புதுமையென்னசொல்லுமென
சொன்னதொருகாரியங்கள் சீக்கிரமாய்சொல்லுமென்ரு
தையல்மூகம்நோக்கி தாதியருமேதுசொல்வாள் [ள்
இட்டஉடமை அடங்கலுந்தந்தாக்கால்
அடியைவிலக்கிடுவேன் என்னுரைத்தார் ஆணழகன்
போதேவருந்தடங்கண் பொன்னுருவிதான்கேட்டு
அவள்-இட்டஉடமையெல்லாம் ஏந்திழையுந்தான்கழ
தங்கஉடமையெல்லாம் தான்கழற்றித்தையலரும் [ற்றி
அத்தனையும்மூட்டைகட்டி ஆரணங்குகைக்கொடுத்தாள்
எடுத்துநடந்தாளே ஏலக்கருங்குழலாள்
எட்டடியும்ஓரடியாய் எட்டியவள் நடந்து
பத்தடியும்ஓரடியாய் பதறிநடந்தாளே

பொன்னுருவி தாதியிடமனுப்பிய ஆபரணமெல்லாம் கர்ணர்
வாங்கிக்கொண்டு பின்னும் அடிக்கச்சொன்னது

காஞ்சிநாடாளுங் கர்ணருக்குமுன்னேவந்து [டாள்
பணிமுகந்துமுன்னேவந்து பாவையருந்தெண்டனிட்

தங்கஉடமைகொண்டு தையலருமுன்னேவந்தாள்
வந்துபணிந்தவரைக் கண்டுமனமகிழ்ந்து
கொண்டுவந்தபொன்னுடமைகொற்றவனுர்தான்வாங்கி
காஞ்சிநாடாளுங் கர்ணரெடுத்துரைப்பார் [ண்
நான்போட்டஉடமையெல்லாம் எந்தனுக்குவந்ததுகா
பொற்கொடியாள்தந்தாளே போட்டஉடமையெல்லாம்
இன்னமடியுமென்முர் கர்ணர்பெருமாளும்
கட்டியடியுமென்முர் கர்ணர்பெருமாளும்
அப்படிக்கேகட்டி யடித்தார்கள்காவலர்கள்
தாதியவள்பார்த்து தையலருமேதுசொல்வாள்
கர்ணர்முகம்நோக்கிக் கட்டழகிசொல்லுகிருள்
போதேவருந்தடங்கண் பொன்னுருவிநாயகமும்
என்னென்னதந்தாலும் என்னுதுஎன்றீரே
மாதரந்தபொன்னுருவி மனதுகரையுருளே
என்னபணிவிடைகள் செய்தால்விடுவீர்கள்
ஏதுசெய்தால்விடுவீர்கள் தெரிந்திடசொல்லுமென்முள்
காஞ்சிநாடாளுங் கர்ணரதுகேட்டு
தாதிமுகம்நோக்கி தார்வேந்தரேதுசொல்வார்
போதேவருந்தடங்கண் பொன்னுருவிநாயகிக்கு
இருக்கின்றஆஸ்தியெல்லாம் எந்தனுக்குத்தந்தாலே
அடியைநிறுத்திவைப்பேன் ஆரணங்குதாதியென்முன்

தாதி மறுபடியும்போய் கர்ணர் உன்னுடைய ஆஸ்தி
யெல்லாம் கொடுத்தால் அடியை நிறுத்துகிறேன்
என்று சொல்ல பொன்னுருவி ஆபரணங்
கொடுத்தனுப்பியது

அந்தஉரைகேட்டு ஆரணங்குதாதியரும்
ஓட்டம்நடையுமாய் ஓடிவந்தாள்தாதியரும்
போதேவருந்தடங்கண் பொன்னுருவிமுன்னேவந்து
தாமக்குழலாளும் தாதியவள்தெண்டனிட்டாள்
போதேவருந்தடங்கண் பொன்னுருவிநாயகியும்
போனதொருகாரியங்கள் புதுமைகளைசொல்லுமென்மு
அந்தவுரைகேட்டு தாதியருமேதுசொல்வாள் [ள்
நீ-கொடுத்தஉடமையெல்லாம்கொண்டுபோய்நான்கொ
அத்தனையும்வாங்கினுர் ஆணழகாகர்ணரவர் [த்தேன்
வாங்கியவருள்ளேவைத்து மகாராசனேதுசொல்வார்
நானிட்டஉடமையெல்லாம் எந்தனுக்குவந்துதோடி

இன்னம்-காரிழையாள்கைதனிலே இருக்குமுடைமையெல்லாம்
ஆணழகிமாளிகையு மவளுடைய ஆஸ்தியையும்
அத்தனையும்கொடுத்தால் அடியைவிலக்குவானேன்
அந்தவுரைகேட்டு ஆணழகிபொன் னுருவி
தங்கஉடைமைகளும் தங்கத்தால்பெட்டிகளும்
பொன்னால்உடமைகளும் பொற்பெட்டிரத்தினமும்
எட்டுக்கால்கட்டில்களும் இருக்கின்றபூஷணமும்
தங்கத்தால்காணிகளும் தனக்குள்ளபூஷணமும்
ஆரணங்குவாசம்பண் ணும் அவளுடையமாளிகையும்
மயிலணையாள்வாசம்பண் ணும் மண்டபமும்உப்பரியும்
அம்மாமார்தான்கொடுத்த அழகானமாளிகையும்
மாமன்மார்தான்கொடுத்த மண்டபமும்கோபுரமும்
மஞ்சளுக்குவிட்டதொரு வளம்பெரியகாணிகளும்
இஞ்சிக்குவிட்டதொரு எலுமிச்சந்தோப்புகளும்
வெத்திலைக்குவிட்டதொரு விஸ்தாரத்தோப்புகளும்
தேங்காய்பறித்துண் ணும் தென்னமரத்தோப்புகளும்
இத்தனையுந்தானெழுதி ஏலக்கருங்குழலாள்
கனமுடையஓலையிலே கையெழுத்தும்தான்போட்டு [வி
மகாராசாகர்ணருக்குத் தெண்டனிட்டேனென்றுசொல்
தெண்டனிட்டேனென்றுசொல்லி தேவருக்குநீயுரைத்
ஓலையைக்கொண்டு கொடுமென்றாள்உத்தமியும் [து
அவ்வோலைதான்வாங்கி ஆரணங்குதாதியரும்

தாதி பொன்னுருவிகொடுத்த ஆபரணமும்
ஓலைச்சுருளையுங் கர்ணரிடத்திற் கொடுத்தது

எட்டடியும்ஓரடியாய் விட்டுமிகநடந்து
பத்தடியும்ஓரடியாய் பதறியவள்நடந்து
காஞ்சிநாடாளுங் கர்ணருக்கெதிரேவந்து [ள்
பட்டோலைமுன்னேவைத்து பாங்கியுந்தெண்டனிட்டா
கையோலைமுன்னேவைத்துகட்டழகிதெண்டனிட்டாள்
காஞ்சிநாடாளுங் கர்ணரவர்பார்த்து
ஓலையைத்தானெடுத்து வாசித்தார்உத்தமனும்
குஞ்சிரிப்புகொண்டு குலுங்கநகைநகைத்து
உடம்புகுலுங்கிடவே உத்தமருந்தான்நகைத்து
தாதிமுகம்நோக்கித் தார்வேந்தரேதுசொல்வார்

பொன்னுருவி தாதிவசங் கொடுத்தனுப்பிய
ஆபரணமெல்லாங் கர்ணர் பெற்றுக்
கொண்டு மறுபடியும் காவலரை
கட்டி அடிக்கச்சொன்னது

நாங்கள்-இட்டஉடமைகளும் ஏழுபரிமண்டபமும்
மஞ்சளுக்குவிட்ட வளம்பெரியசேனைகளும்
அத்தனையும்எங்களது ஆரணங்குதாதியரே
எங்களுடமையெல்லாம் எங்களுக்குவந்துதடி
மன்னவனர்சேவகரை வாரியடியுமென்ருர்
காவலனர்வீரியரைக் கட்டியடியுமென்ருர்
அந்தவுரைகேட்டு அங்கிருந்தசேவகர்கள்
கட்டியடித்தாரே கனகமுடிசேவகரும்
வீசியடித்தாரே வேல்பொருந்துங்கண்ணனை
மயிரைப்பிடித்தடித்தார் மாஞ்சோலைக்காவலனை
அடித்த அடியாலே அலறுகிருன்மன்னவனும்

பொன்னுருவியால் அனுப்பப்பட்ட தாதி
கர்ணர் செய்வதைப் பொறுக்காமல்
மனவருத்தத்துடன் அவரைக்
கேட்டுக்கொள்வது

அப்போதுதாதியவ ளாரணங்குமேதுசொல்வாள்
காஞ்சிநாடாளும் கர்ணருக்குமுன்னேவந்து
வண்ணமுடிவணங்கி மாதவளுந்தெண்டனிட்டு
ஐயாவே நீர்கேளும் அடியேனெருவார்த்தை
என்னையா நீர்கேளும் இன்னமொருவார்த்தை
போதேவருந்தடங்கண் பொன்னுருவி நாயகியாள்
அந்த-மங்கையிருக்குமிடம் மன்னுநீவந்ததுவும்
கமலப்பூநாயகியைக் கட்டியணைந்ததுவும்
மாதரிளங்கொடிக்கு மைந்தனுண்டானதுவும்
மசக்கைபெரிதாகி மாங்கனிகள்கேட்டதுவும்
மன்னுவுன்தோட்டத்திலே மாது நான்வந்ததுவும்
ஒருமாங்காய் நான்பறித்து உத்தமிக்குச்சென்றதுவும்
மாதற்கு நான்கொடுக்க மாந்தோப்புகாவலரை
மாறியடிப்பதாலே வைகுண்டஞ்சேருவதும்
அடிபொறுக்கமாட்டாதே அவலோகஞ்சேருவதும்

போதுமையாளந்தனுக்கு மாங்காய்பறித்தகொள்ளை
இன்னமென்னகொடுத்தால் இனிவிடுவீர்மன்னவரே
விருப்பமெதுகொடுத்தால் விடுவீர்காண்மன்னவரே
அந்தஉரைகேட்டு ஆணழகர்கர்ணரவர்

கர்ணர் தாதியரைப்பார்த்து பொன்னுருவி எனக்குப் போசனஞ் செய்துபோட்டால் அடியை நிறுத்துகிறேனென்றது.

நீ-கொடுப்பதும்வாங்குவதும் ஏற்காதுஎந்தனுக்கு
தருவதும்வாங்குவதும் தையலரேமாளாது [டுப்பேன்
நீ-கொடுத்தஉடமையெல்லாம் கொம்பனைக்குநான்கொ
அவள்-தந்தஉடமையெல்லாம் தருவேன்காண்தையலற்
அவளுடையகையாலே அடிசில்சமைக்கவேணும் [கு
தேசத்தையாளும் துரியோதனராஜருக்கும்
பேடைமயில்கண்ணாள் பெருந்திருவாள் நாயகிக்கும்
தோகைமயிலனையாள் துற்சடையாள் நாயகிக்கும்
எந்தனையுங்கூட உடனகப்பந்திவைத்து
அவளுடையகையாலே அடிசிலிடவேணும்
நாங்கள்-போசனமுண்டபின்புபொற்கொடிமாதுகன்னி
காச்சாக்களிப்பாக்கும் கம்மாறுவெற்றிலையும்
எங்களுக்குத்தான்கொடுக்க வேணுங்காண்மாதுகன்னி
அன்றுஇரவில் அவளிடத்தில் நானிருந்து
கட்டியணைத்து கலந்துவிளையாடவேணும்
இதுகளுக்கெல்லாம் இசைந்தாளேயாமானல்
தோகையவள்வாயாலே சொன்னாலுமாகாது
கையாலெழுதித் தரவேணுங்கட்டழகி
அப்படிக்குத்தந்தாலே அடியைவிலக்கிடுவேன்
என்றுமவருரைக்கத் தாதியதுகேட்டு
வீசிநடந்தாளே விசையுடனேதாதியரும்
அவ்வீதிவிட்டு அன்புடனேதாண்டியவள்
போதேவருந்தடங்கண் பொன்னுருவிமுன்னேவந்து
தாமக்குழலாளுந் தாதியவள்தெண்டனிட்டாள்
போதேவருந்தடங்கன் பொன்னுருவியேதுசெய்தாள்
போனதொருகாரியங்கள் புதுமைஎன்னசெப்புமென்று
சென்றதோர்காரியச்சேதியென்னசொல்லுமென்றாள் [ள்

உண்கையால் கர்ணருக்குப் போசனஞ் சமைத்துப்
போட்டால் அடியை நிறுத்துவேனென்று
கர்ணர் சொன்னதை தாதி பொன்னுருவி
யிடம் வந்து சொன்னது

அந்தவுரைகேட்டு அத்தாதியேதுசொல்வாள்
காஞ்சிநாடாளுங் கர்ணருக்குத்தெண்டனிட்டு
கொடுத்தஉடமை அடங்கலும் நான்கொடுத்தேன் [ன்
விட்டுவிடவேணுமென வேந்தருக்குதெண்டனிட்டே
அத்தனையுந்தான்வாங்கி அவருதென்றுதானுரைத்தார்
மற்றுமுரையது கேட்டேனம்மாமன்னவரை [ம்
அடிசில்சமைக்கணுமாம் அவர்களுக்குப்போடணுமா
கர்ணமகாராசருன்னைக் கட்டியணையணுமாம்
கட்டியணைந்து கலந்துவிளையாடணுமாம்
அப்படிக்கேநல்லதென்று ஆரணங்கேநீயுரைத்து
வாயாலேசொன்னல் மாளாதாம்மன்னவற்கு
கையாலெழுதித் தந்தாலேசம்மதிப்பார்
அப்படிக்குச்செய்தாலே அடியைநிறுத்திடுவார்

கர்ணருக்கு பொன்னுருவி ஓலை எழுதுவதைக்குறித்து
தாதியின்பேரில் விசனப்படுகிறது

என்றவுரைகேட்டு ஏதுசொல்வாள்பொன்னுருவி
நீ-தாதியொருத்தி தரமழிப்பாயென்றறியேன்
மோப்பியொருத்தி முனேகுலேப்பாயென்றறியேன்
கட்டழகிநொந்துமவள் காரிழையாளேதுசொல்வாள்
ஓலைஎடுத்தந்த உத்தமியாள்தானெழுந்து
இழிகுலத்தானென்று தீண்டாமல்நானிருந்தேன்
சாதிகெட்டானென்றுசொல்லிசலிப்பாக,நானிருந்தேன்
தேர்ப்பாகனென்றல்லவோ தீண்டாதேநானிருந்தேன்
அடி—மங்கையரேஎந்தனுக்கு மசக்கைகுணமாகி
மசக்கைபெரிதாகி மாங்காய்மனதாகி
மாங்காயாலல்லவோ வந்துமுகம்பார்க்கிறது
வர்னமுகம்பார்க்கிறது வாவென்றழைக்கிறது
இப்படிக்கிருந்துதோ ஈஸ்வரனர்தன்செயலும்
கடவுள்செயலோவென்று கலங்கியமுகலுற்ருள்

தேம்பியழுகலுற்ருள் தெய்வத்தைத்தானினைந்து
அப்படிக்குத்தானழுக அங்கிருந்ததாதியவள்

பொன்னுருவி விசனப்படுவதைப் பார்த்து
தாதிகள் தைரியஞ் சொல்லுவது

அங்கிருந்ததாதியர்கள் அரிவையர்களேதுசொல்வார்
ஆனைகட்டிவாழ்ந்தாலும் ஆரணங்கேஎன்னுச்சி
குதிரைகட்டிவாழ்ந்தாலும் கொற்ருர்குழலியரே
பல்லக்கிலேறி வாழ்ந்தாலும்பைங்கிளியே
கொண்டாள்பெருமையது வேணுமம்மாகொம்பனையே
தாலிப்பெருமையது வேணுமம்மாதார்குழலே
மைந்தன்பெருமையது வேணுமம்மாமங்கையரே
ஆர்வீடுஆர்வீடு ஆச்சியரே ஆர்வீடு
ஆளனுக்கு நீபணிந்தா லதனுலேகுற்றமில்லை
பத்தாவை நீபணிந்தால் பழுதொன்றும்வாராது
கொண்டவனை நீபணிந்தால் குற்றங்கள்வாராது
அடிசில்சமைப்பேனென்று ஆரணங்கே நீஎழுது
போசனஞ்செய்யவல்லோ வாருமென்று நீஎழுது
இப்படி-எழுதியனுப்பினல் இறங்கும்அவர்மனது
மனமிறங்கிமன்னவனும் மற்றும்பிழைபொறுப்பார்
மாங்காய்கொடுத்ததொரு மன்னவரைவிட்டிடுவார்

பொன்னுருவி தாதிகள் தைரியஞ்சொன்னதின்
பேரில் மனந்தெளிந்து தாளிப்பனையோலை
எடுத்து கர்ணருக்கெழுதி தாதிவசங்
கொடுத்தனுப்பியது

அந்தவுரைகேட்டு ஆரணங்குபொன்னுருவி
தாளிப்பனையோலை வாரித்தலைவரிந்து
வெள்ளிப்பனையோலை இருபுரமுந்தான்சீவி
செம்பொனெழுத்தாணிகொண்டு சீராகக்கைபிடித்து
விக்கினரைவேண்டி விஞயகரைத்தான்தொழுது
கணபதியைவேண்டி கைதொழுதுதெண்டனிட்டு
காஞ்சிநாடாளும் கர்ணர்பெருமாளே
அடிக்கீழ்முடிசாய்த்தேன் அருங்கிளியாள்பொன்னுருவி
நான்-செய்தபெருங்குற்றமதை தேவரீர்தான்பொறுத்து
குற்றங்கள்செய்தாலுங் குணமாகக்கொண்டணைத்து

மனதுபெரிதுகந்து மன்னவனே நீவிலக்கி
எனக்காகவேபொறுத்து இவ்வடியை நீர்விலக்கும்
அப்படியென்றுசொல்லி எழுதினுள்ஓலையிலே
ஓலையெழுதியல்லோ முத்தரிக்கந்தான்போட்டு
தங்கச்சுருளோலை தாதிகையில்தான்கொடுத்தாள்
தாதியவளப்பொழுது தன்கையில்தான்வாங்கி
பொன்னேலைகைபிடித்து போருளவள்தாதி
காஞ்சிநாடாளும் கர்ணரெதிரேவந்து
ஓலைச்சுருளைவைத்து உத்தமியாள்தெண்டனிட்டாள்

தாதிகொண்டுவந்த ஓலையை கர்ணர்வாசித்து
காவலரை கட்டவிழ்க்கச் சொன்னது

காஞ்சிநாடாளும் கர்ணரவர்பார்த்து
ஓலைச்சுருளெடுத்து உத்தமனுர்வாசித்து
கட்டழகிவார்த்தைகொண்டு கர்ணர்மனங்குளிர்ந்து
ஆள்பெருஞ்சேவகரை ஆணழகர்தானழைத்து
கட்டையவிழுமென்ருர் காவலர்கள்வீரியரை
கட்டையவிழ்த்தார்கள் காவலனுர்வீரியரும்
நுட்பம்உடையவனை நோகாதடித்தார்கள்
ஓயாதழுதவனும் உடனேவெளியானுன்
காஞ்சிநாடாளுங் கர்ணரெழுந்திருந்து
அவர்-எட்டநடந்தாரே எதிரொளிக்குஞ்சூரியன்போல்
சாஞ்சிநடந்தாரே சந்திரனொளிபோலே
மாநகரமாளும் மகாராசன்மாளிசென்ருர்
தேசத்தையாளுந் துரியோதரனும்
பேடைமயில்கண்ணுள் பெருந்திருவாள்நாயகமும்
தோகையிலணையாள் துற்சடைப்பூநாயகமும்
எல்லவரும்ஒன்ருக வீற்றிருக்கும்வேளையிலே

கர்ணர் காவலனைக் கட்டவிழ்த்துப்போட்டு தன்வீடுவந்து
துரியோதனன் பெருந்திருவாள் துற்சடையாள்
இம்மூவரையும் தன்னேடு கூட்டவந்து
பொன்னுருவி யிடத்திற்குப்போய்
போசனஞ்செய்ய அழைத்தது

காஞ்சிநாடாளுங் கர்ணரவரங்கேவந்து
இருக்கின்றபேர்களுக்கு ஏதுசொல்வார்கர்ணரவர்

போதேவருந்தடங்கண் பொன்னுருவிமாளிகையில் [ம்
விருந்துக்குதானழைத்தாள்வேல்பொருந்துங்கண்ணரு
அவள்-அழைத்ததினுலே நாமனைவரும்போகவேணும்
இன்றைக்குமத்தியான மெல்லாரும்தானிருந்து
விருந்துபொசிப்பதற்கு வாருங்கோளென்றுசொன்னுன்
அந்தவுரைகேட்டு அவர்களெடுத்துரைப்பார்
ஏதுகாண்மன்னவரே இறங்கினுளோபொன்னுருவி
நாடுஞ்செழிக்கவோ நாமுஞ்சுகப்படவோ
சந்தோஷப்பட்டு சரீரங்கள்பூரித்தார்
வருகிறோமென்றுசொல்லி மன்னவர்கள்தானிருந்தார்
இப்படியாக இவரிருக்கும்வேளையிலே

பொன்னுருவி கர்ணருக்குச் சமையல் செய்தது

போதேவருந்தடங்கண் பொன்னுருவிநாயகியாள்
ஆக்குமடப்பளியை அலகிட்டுத்தாள்திறந்து
கோட்டைமடப்பளியை குச்சிட்டுத்தாள்திறந்து
சாந்தால்தரைமெழுகிச் சந்தனத்தாற்கோலமிட்டு
குங்குமத்தாலே குளிரச்சுவர்பூசி
ஆச்சாவுந்தேக்கும் அரசும்பிளந்தடுக்கி
நெட்டென்றகல்லை நெரித்துநெருப்பாக்கி
தென்கடலுமாணிக்கம் திரட்டிஉமிசேர்த்து
வடகடலுமாணிக்கம் வாரிஉமிசேர்த்து
பெருநெருப்பைமூட்டி பெண்கொடியாளேதுசெய்வாள்
பானைகழுவி பன்னிருலைவார்த்து
அசியானைச்செந்நெல்லை ஆத்திமணல்பொறுக்கி
துசியானைச்செந்நெல்லை தூத்திமணல்பொறுக்கி
பன்னீருலைவார்த்து பதமாகவைத்தாளே
அரிசியைதீட்டியே அன்பாகத்தான்போட்டு
பதம்பார்த்துதான்வடித்தாள் பைங்கிளியாள்கையாலே
வாழைக்காய்கொய்து வழுதலங்காய்காம்பரிந்தாள்
பாவக்காய்கொய்து பயத்தங்காய்காம்பரிந்து
சோலைப்பலாக்காய் சுளைசுளையாய்க்கொய்திடுவாள்
ஈரப்பலாக்காய் இளமுள்ளுகொய்திடுவாள்
நல்லவெல்லம்பூசினிக்காய் கொய்வாள்புளியிடுவாள்
உப்பூரபுளியூர உகந்துமிகப்பொருந்த
தாளித்திறக்கினுள் சமைத்தபதார்த்தமெல்லாம்

நெய்காச்சியாற்றினுள் பொன்னுருவிபூமுடியாள்
பால்காச்சியாற்றினுள் பங்கயஞ்சீர்கண்ணுளும்
தாதியரைத்தானழைத்து தையலருமேதுசொல்வாள்
அடிசில்சமைத்தேனடி அழையுமவரையென்ருள்

பொன்னுருவி தாதியை யழைத்து கர்ணரிடத்திற்
போய் சமையல் செய்து முடிந்துதென்று
அவரை யழைத்துவரச் சொன்னது

அந்தவுரைகேட்டு ஆரணங்குதாதியவள்
சந்தோஷப்பட்டு தானடந்தாள்வீதியிலே
தேரோடும்வீதி தெருவும்பலதாண்டி
சித்திரவீதி தெருவும்பலதாண்டி
கடையும்கடைத்தெருவும் கருமாரவீதிவிட்டு
மாநகரமாளும் மகாராசன்மாளிசென்ருள்
தேசத்தையாளும் துரியோதனன்முன்னேவந்து
அடிவணங்கிதெண்டனிட்டு தாதியவளேதுசொல்வாள்
போதேவருந்தடங்கண் பொன்னுருவி நாயகியாள்
ஆனந்தவாழ்மாரி அடிசில்சமைத்தாள்காண் [ள்
அமுதுண்ணவாருமென் றடிவணங்கிதெண்டனிட்டா

தாதி போசனத்துக்கழைக்க கருணர் துரியோதனன்
துற்சடையாள் பெருந்திருவாள் பந்துசனங்கள்
இவர்கள் எல்லாரும் பொன்னுருவி
வீட்டுக்கு விருந்துண்ண
வருகிறது

அந்தவுரைகேட்டு ஆனந்தமாயெழுந்தார்
கைகாலலம்பி கனிவாயைச்சுத்திபண்ணி
வாயோடுபல்லும் மதிமுகமும்சுத்திபண்ணி
சிவசிவாவென்று திருநீற்றுக்காப்புமிட்டு
திக்கெங்குநோக்கித் திசையெங்கும்ஆதரித்து
தும்பைமலர்போட்டு சூரியனைப்பூசைபண்ணி
ஐயனேமெய்யனே ஆயிரங்கண்ணிந்திரனே
பொய்சொல்வார்க்கெல்லாம் புரங்காக்கும்புண்ணியனே
மெய்சொல்வார்க்கெல்லாம்விளக்கொளியாய் நின்றவரே
முப்பத்துமுக்கோடி முனிவரையும்பூசைபண்ணி

நாற்பத்தெண்ணுயிரம் ரிஷிகளையும்கைதொழுது
சுத்திவளையவந்து செவியிலொருபூச்சொருகி
இனிவாருந்தம்பிஎன்று இசைந்துநடக்கலுற்ருர்
பேடைமயில்கண்ணுள் பெருந்திருவாள்நாயகியும்
தோகைமயில்கண்ணுள் துற்சடையாள்மங்கையரும்
கால்கைகள்சுத்திபண்ணி கனிவாயுங்கொப்பளித்து
சிவசிவாவென்று திருநீற்றுக்காப்புமிட்டு
சுத்திவளையவந்து செவிதனிலேபூச்சொருகி
ஆரணங்குமாதரெல்லாம் அரண்மனையிலுட்புகுந்து
பட்டாடைதான்களைந்து பாவாடைதான்உடுத்தி
சரிகைபாவாடையின்மேல் சால்வைகள்மேல்போர்த்து
தாதியரைத்தானழைத்து தண்டிகைகள்கொண்டுவாடி
தண்டிகையைத்தானெடுத்து தாதியர்கள்கொண்டுவந்
அவ்வீதிதாண்டி வாரார்கள்வீதியிலே [தார்
தேரோடும்வீதி தெருவும்பலதாண்டி
சித்திரவீதி தெருவும்பலதாண்டி
செம்பவளவீதியெல்லாம் தாண்டியந்தத்தையலர்கள்
கடையுங்கடைத்தெருவும் கருமாரவீதிவிட்டு
போதேவருந்தடங்கண் பொன்னுருவிமாளிசென்ருர்

பொன்னுருவி மாளிகைக்கு கர்ணர் முதலாக
அனைவோரும் விருந்துண்ண வந்தது

மாளிகைக்குள்ளாக மன்னவர்கள்வந்தார்கள்
போதேவருந்தடங்கண் பொன்னுருவிதான்பார்த்து
வந்ததொருமன்னருக்கு வண்ணத்தடுக்குமிட்டாள்
சிம்மாதனங்களிட்டு வெண்போல்துயில்மடித்தாள்
இட்டதொருஆசனத்தி லேறியவர்வீற்றிருந்தார்
இருவரந்தமாதருக்கு இட்டாளேபொன்தடுக்கு
இட்டதொருஆசனத்தில் மாதர்களும்வீற்றிருந்தார்
தேசத்தையாளுந் துரியோதனன்முன்னேவந்து

பொன்னுருவி துரியோதனன் பெருந்திருவாள்
அவர்களை வணங்கி அவர்களால்
ஆசீர்வதித்தலைப்பெற்றது

மாதுஇளங்கொடியாள் மாமாவைத்தெண்டனிட்டாள்
தேசத்தையாளுந் துரியோதனன்பார்த்து

வந்துபணிந்தவளை கண்டுமனமகிழ்ந்து
வாழ்வீர்வளர்ந்திருப்பீர் வைத்திருப்பீருய்ந்திருப்பீர்
நிற்பீர்நிலைதரிப்பீர் நீடுழிவாழ்ந்திடுவீர்
பெற்றிடுவீர்பெற்றிடுவீர் பிள்ளைபதினறும்
அத்திபுரத்துக்கு அரசாளஆண்பெறுவீர்
அங்கனுடநாடாள ஆண்பிள்ளைபெற்றிடுவீர்
காசிவளநாடாளக் காளைகளைப்பெற்றிடுவீர்
மலடர்கள்வாசலிலே மைந்தர்களைப்பெற்றிடுவீர்
அம்பலத்துவாசலிலே ஆண்பிள்ளைபெற்றிடுவீர்
ஆல்போல்தழைத்து அறுகுபோல்வேரோடி
மூங்கில்போல்சுற்றும் முசியாமல்வாழ்ந்திடுவீர்
கர்ணரும்நீயும் கலந்துமிகவாழ்ந்திடுவீர்
வாழ்வீர்காணென்றும் மனங்குளிரவாழ்த்தினர்
போதேவருந்தடங்கண் பொன்னுருவிநாயகியும்
பேடைமயில்கண்ணுள் பெருந்திருவாள்முன்னேவந்து
காண்கிறேனச்சியென்று கால்மேல்முடிசாய்த்தாள்
பேடைமயில்கண்ணுள் பெருந்திருவாள்தான்பார்த்து
வந்துபணிந்தவளைக் கண்டுமனமகிழ்ந்து
வாழ்வீர்வளர்ந்திருப்பீர் வையகத்திலுய்ந்திருப்பீர்
நிற்பீர்நிலைத்திருப்பீர் நீடுழிவாழ்ந்திடுவீர்
கல்புதைத்ததூண்போல் கலங்காமல்வாழ்ந்திடுவீர்
வில்புதைத்ததூண்போல் விளங்கவேவாழ்ந்திடுவீர்
வாழ்வீர்காணென்று மனங்குளிர்ந்துவாழ்த்தினள்
வாரியெடுத்து மடிமேலேகொண்டணைந்து
பிள்ளைபெறும்நாளையிலே போதேவுறவானீரோ
மைந்தன்பெறும்நாளையிலே வணங்கியுறவானீரோ
என்று-பரியாசமாகவே பேசியவளிருந்தாள்
தோகைமயிலனையாள் துற்சடையுமேதுசொல்வாள்
போதேவருந்தடங்கண் பொன்னுருவிநாயகமே
காஞ்சிநாடாளுங் கர்ணரவரோடிவந்து
நீ-கலந்துஉறவாடி களங்கமற்றுவாழ்ந்தீரோ
கூடிவிளையாடி குணமுடனேவாழ்ந்தீரோ
எப்படிக்கியானலும் இருவர்மனமுமொத்து
கலந்திருந்தால்போதுமடி கட்டழகிநாயகமே
இப்படியேசொல்லி இருந்தார்களெல்லவரும்

### பொன்னுருவி கர்ணர் முதலானபேர்களுக்கு அன்னம் பகிர்ந்து பரிமாறுகிறது

போதேவருந்தடங்கண் பொன்னுருவி நாயகியாள்
ஆக்குமடப்பளியை அலகிட்டு நீர்தெளித்து
செம்மான்முகக்கால் நிறுத்தி செம்பொன்தடுக்குமிட்டா
புலிமுகக்கால் நிறுத்தி பொன்னுல்தடுக்குமிட்டாள் [ள்
இட்டதொருஆசனத்தில் எறியவர்வீற்றிருந்தார்
வாழைஇலேபோட்டு மணிச்சொமபு நீர்தெளித்தாள்
தும்பைமலர்போல் போசனமும்தான்சொரிந்தாள்
சுத்திகரிகள்வைத்து புத்துருக்குநெய்வார்த்தாள்
குத்துப்பருப்புமிட்டு கூசாமல்நெய்வார்த்தாள்
பொரித்தபொறிக்கறியும் பொன்போல்சிறுபருப்பும்
கூட்டுக்கறியும் குழம்பில்வகைக்கறியும்
ஆயிரத்தெட்டு அருங்கனியும்போஜனமும்
முன்னூற்றிபெட்டு மூதற்கறியும்போஜனமும்
அத்தனேயுங்கொண்டு படைத்தாளேஆணழகி
அந்தஅடிசில் அமுதுண்டபிற்பாடு
அத்தளிகைமாற்றியொரு பொற்றளிகைமுன்னேவைத் [தாள்
காச்சியபாலும் திருத்தியமுப்பழமும்
வாழைப்பழமும் மதுரையின்மாம்பழமும்
வேரின்புரத்தில் வெடித்தபலாச்சுளேயும்
கொம்பில்சிறுதேனுங் கோதுபடாசர்க்கரையும்
மலேயில்சிறுதேனும் வங்காளச்சர்க்கரையும்
அந்தஅடிசில் அமுதுண்டபிற்பாடு
பாலடிசில் பந்நீரால்கையலம்பி [தார்
உடைகொண்டுவாய்துடைத்து உத்தமர்கள்வீற்றிருந்
போதேவருந்தடங்கண் பொன்னுருவி நாயகியாள்
வயிரக்கல்பெட்டியை வகையுடனேதான்திறந்து
வாடாயிலேச்சுருளும் வண்ணத்துவர்பாக்கும்
கோர்வைஇலேச்சுருளும் கொட்டைத்துவர்பாக்கும்
காச்சல்களிப்பாக்கும் கம்மாறுவெற்றிலேயும்
ஏலம்லவுங்கமும் இசைந்தகளிப்பாக்கும்
சாதிப்பெருங்கடலில் சங்குசுட்டசுண்ணும்பும்
சுருளேசுருள்மடித்து சுண்ணும்பைசூட்சமிட்டு
சுத்தமிட்டபொன்மடலில் உள்ளேசுருள்மடித்து

தங்கத்தாம்பாளந்தன்னில் தாம்பூலந்தானெடுத்து
அனைவருக்குமுன்பாக அவரவர்க்குத்தான்கொடுத்தாள்
தாம்பூலந்தான்தரித்து தயவாகத்தானிருந்தார்
இப்படியாக இவரிருக்கும்வேளையிலே

கர்ணன் பொன்னுருவியுடன் கூடுகிறது

கர்ணரும்பொன்னுருவி களைத்துவிளையாடி
தன்னுடையமாளிகையில் தனித்துவிளையாடி
மன்மதனும்ரதியும்போல் மகிழ்ச்சியுடன்கூடி
கந்தரும்வள்ளியும் கைகலந்தபாவனைபோல்
இருவருந்தான்சேர்ந்து இசைவாகவாழுகையில்

பொன்னுருவி புத்திரனைப்பெற்று விஸ்வகேதென்று
பெயரிடுகிறது

பொன்னுருவிநாயகியாள் பொற்கொடியாளப்பொழுது
மாதுநல்லாள்பொன்னுருவி மைந்தருமுண்டாகி
ஓராந்தான்மாதமாகில் ஒருதிங்கள்கிழமையாச்சு
இரண்டாந்தான்மாதமது இரண்டுதிங்கள்கிழமையாச்சு
இரண்டாந்தான்மாதமது இரண்டுதிங்கள்மாதமாச்சு
மூன்றுந்தான்மாதத்திலே மூலமூகந்தான்கறுத்து
நான்காந்தான்மாதத்திலே நாயகியுமசக்கையானாள்
ஐந்தாந்தான்மாதத்திலே அடிவயிறுபெருந்திடுமாம்
ஆறுந்தான்மாதத்திலே அங்கமெல்லாந்தங்கநிறம்
ஏழாந்தான்மாதத்திலே இளங்கொடியாள்நாயகியும்
பொற்கொடியாள்நாயகிக்கு போதச்சீமந்தஞ்செய்தார்
எட்டாந்தான்மாதத்தி லிளைப்புந்தவிர்ப்பானாள்
இளைப்புந்தவிப்புமானாள் இளங்கொடியாள்நாயகியும்
ஒன்பதாமாதத்திலே உடம்பெல்லாம்நோகுதென்பாள்
பத்தாந்தான்மாதத்திலே பெற்றாளேவிஸ்வகேதை
பெற்றாளேபொன்னுருவி பேருமிட்டாளப்பொழுதே
வளர்த்தாளேபொன்னுருவி வைத்திருந்தாள்விஸ்வ
இப்படியாக இருக்கின்றவேளையிலே [கேதை

பூலோக ராஜாக்கள்வந்து சகலமானபேருக்கும்
வாழ்த்துதல் செய்கிறது

அப்போ-பூலோகராஜாக்கள் புத்திரனைத்தான்பார்த்து
பூமாரிதான்பொழிந்தார் பூலோகராஜாக்கள்

மண்டலத்துராஜாக்கள் மழைமாரிதான்சொரிந்தார்
மழைமாரிதான்பொழிந்தார் மண்டலத்துராஜாக்கள்
பொன்னுருவிசமக்கை புகழ்ச்சியாய்கேட்டோர்கள்
கர்ணருடன்கதையைக் காதாரக்கேட்டவர்கள்
கலியாணமில்லாதார் கடுகமணம்பெறுவார்
புத்திரனில்லாதார் புத்திரனுண்டாவார்
இதை-வாங்கிபடித்தவர்கள்வாழ்வுண்டாய்தானிருப்பார்
பொன்னுருவிகதைகேட்டோர்புகழ்ச்சியாய்வாழ்ந்திருப்
ஆல்போதழைத்து அறுகுபோல்வேரோடி [பார்
மூங்கில்போல்சுற்றம் முசியாமல்வாழ்ந்திடுவார்
வாழிவாழியென்றுசொல்லி வரமளித்தார்ஈஸ்வரனர்

பொன்னுருவி மசக்கை

முற்றிற்று.

---

திருமகள்விலாசம் பிரஸ், சென்னை:—1951.